KALKI
006 ரூ.8.00
பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...









# அப்துல் கலாமின் கனவு!

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

## தீபாவளி இதழ்லேர்ந்து...

### உங்களுக்கு ரொம்பப் பிடிச்ச



அரசியல்... ஆன்மிகம்...
ஆரோக்யம்.. கல்வி...
கலை... எல்லாம்
இன்னும் அதிகமா...
அம்சமா... அட்டகாசமா...
மிளிரப்போகுது!

## தயாராயிட்டீங்களா!

கடைசிப் பக்க சித்திரம் பேசுதடி புகைப்படங்கள் யாவும் பேசுகின்ற சித்திரங்களாகப் பரிமளிக்கின்றன.

- சு.இந்துமதி, நெய்வேலி

தமிழக முதல்வர் மு.கருணாநிதி, சென்னைக்கு அடுத்துத் துணை நகரம் அமைக்கத் திட்டமிட்டதையும் அதை, பா.ம.க. தலைவர் ராமதாஸின் எதிர்பால் கைவிட்டதையும் காட்டுகிற கார்ட்டூன் அருமை!

- இரா.சக்கரபாணி, மதுரை

'கல்கி'க்கு ஒரு 'ஜெனரல்சல்யூட்.

- ரேவதிப்ரியன், ஈரோடு

பெரியவாளின் அருள்வாக்கு தற்சமயம் நமது மக்களுக்கு விளக்குத்திரி தூண்டுதல் போல் அமைந்துள்ளது.

- நா.பாலசுப்பிரமணியன், சென்னை

'சன்னியாசி'யிடம் வரம் கேட்க வந்து, அவருடைய வயிற்றுப் பசியை உணர்ந்து உணவு தந்து உபசரிக்க வந்த அம்மாசியின் கபடமற்ற உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டி நெஞ்சை நெகிழ்த்தி விட்டார் கௌண்டின்யன்.

- பி.எல்.பரமசிவம், புனலூர்

கல்கி 80 பக்கங்கள் எண்ணற்ற விஷயங்கள், ஏராளமான தகவல்கள். தரமான தயாரிப்பு.

- சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி




# மன பாரத்தை ஏத்திடுறாங்க!

வருடங்கள் கூடக்கூட மெருகுகூடி புதுப்பொலிவுடன், பக்கங்களைத் திருப்பிய வுடனே பளிச்சென வாரா வாரம் ஆரவாரமில்லாமல் அமர்க்களப்படுத்தும்

ஆயிரம் வார்த்தைகளில் சொல்ல வேண்டிய கருத்தை - ஒரு புகைப்படத்தின் மூலமும் ஐந்து வார்த்தைகளினாலும் மனதில் பாரத்தை

வட்டமேஜை

**திருத்தம்!**

சென்ற இதழின் 'தகவல அலமாரி' பகுதியில் வெளிவந்த KMCH மருத்துவமனை குறித்த கட்டுரையில், 'இருதய நோய் சிகிச்சையிலேயே ஆஞ்சியோகிராம், ஆஞ்சியோ பிளாஸ்டி, ஸ்டென்ட்டிங் என்று அத்தனை வகை சிகிச்சைகளும் இங்கு வெற்றிகரமாகச் செய்யப்படுகின்றன' என்று வந்திருக்க வேண்டியது, 'அத்தனை வகை அறுவையில்லா சிகிச்சைகளும்' என்று தவறுதலாகப் பிரசுரமாகிவிட்டது. திருத்தி வாசிக்கவும்.

ஏற்படுத்திய விதம் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

- இரா.மனகாவலன், கோவை

**பி**ள்ளையின் கார்ட்டூன்கள் இரண்டும் நச். சுருங்கச் சொல்லி நிறைய விளங்க வைத்தது.

- ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

'**அ**ப்துல் கலாம் காட்டும் ஆக்கப்பாதை' தலையங்கத்தை அரசியல் வாதிகள், கல்வியாளர்கள், நிறுவனங்களின் அதிபர்கள் நாட்டு மக்கள் அனைவருமே படிக்க வேண்டியது அவசியம்.

- ஆர்.ராஜலட்சுமி, கரூர்

**ந**கைச்சுவை இழையோடிய ஒரு கப் காதல் சிறுகதையின் நிகழ்வுகளும், முடிவும் மாறுபட்ட கோணத்தில் அமைந்திருந்தது.

- எஸ்.எம்.பாலசுப்ரமணியன், போடி

**அ**ப்துல் கலாம் காட்டும் ஆக்கப்பூர்வமான பாதையைத் தலையங்கத்தில் படித்தேன். அரசியலுக்கு அப்பாற்பட்டக் கடமை ஒன்றிருக்கிறது. அது அவர் சொற்படி நடப்பதுதான் என்ற கல்கியில் வந்த கல்வெட்டுகள்.

- எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை

'**த**ர்மமா இது?' என்ற தலைப்பில் ரஸிகா எழுதியதைப் படித்தேன். பேப்பரைப் பார்க்காமல் பாடுவோர் எல்லோருமே பாவம் ததும்பப் பாடி விடுவதில்லை; பேப்பர் வைத்துக் கொண்டு பாடுவோருக்கு பாவம் இராது என்றும் சொல்வதற்கில்லை. இவ்வாறு பொதுப் படையாக ஏன் விமர்சிக்க வேண்டும்?

அமெரிக்காவிலிருந்து
பாரதியன் (மின்னஞ்சல் மூலமாக)




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **மு.மாறன்**

வடிவமைப்பு : **எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி : 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் : 044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யுஎஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

கௌதம்ராம்

# ஆயுதப் ~~அமைதிப்~~

அமைதிப் பூங்காவாக இருந்த தமிழகம் ஆயுதப் பூங்காவாக மாறிவிட்டதா என்கிற கேள்விதான் கடந்த சில நாட்களாக தமிழகக் காவல் துறையிலும் மக்கள் மனத்திலும் விஸ்வரூபம் எடுத்து நிற்கிறது. ஆனால், சி.பி.ஐ. முன்னாள் கண்காணிப்பாளரான ரகோத்தமன், 'இந்தக் கேள்வியே தவறு' என்கிறார். ராஜீவ் காந்தி படுகொலையை விசாரித்த சிறப்புப் புலனாய்வுக் குழுவில் முதன்மைப் புலனாய்வு அதிகாரியாகப் பணிபுரிந்த ராஜோத்தமன் பேசப் பேச அதிர்ச்சி அலைகள்...

"ராக்கெட் குண்டுகள் சென்னையில் தயாரிக்கப்பட்டிருப்பதும், அவை ஆந்திராவுக்கு அனுப்பப்பட்டிருப்பதும் அம்பலமாகி இருக்கிறது. இது இரண்டு மாநில காவல்துறை சம்பந்தப்பட்ட விஷயம் என்பதாலும், இரண்டுமே மத்திய கூட்டணி அரசில் அங்கம் வகிக்கும் கட்சிகள் என்பதாலும், மிகவும் எச்சரிக்கையுடன் இரண்டு மாநில அரசுகளும் இந்த விஷயத்தைக் கையாளுகின்றன.



சர்ச்சை

காஷ்மீர் தவிர நம் நாட்டின் மற்ற பகுதிகளில் இயங்கி வரும் தீவிரவாத இயக்கங்களுக்கு ராக்கெட் லாஞ்சர்களைப் பற்றிய தொழில் நுட்பமோ, கையாளும் திறனோ கிடையாது. ஆந்திராவில் கைப்பற்றப்பட்ட ராக்கெட் லாஞ்சர்கள், விடுதலைப்புலிகளுக்காக உற்பத்தி செய்யப்பட்டவை. அவர்கள் ராக்கெட் லாஞ்சர்களைப் பயன்படுத்துவதில் வல்லவர்கள். ஐரோப்பா, அமெரிக்கா போன்ற வல்லரசு நாடுகள் புலிகள் இயக்கத்துக்குத் தடை விதித்ததையடுத்து, அவர்கள் உலக ஆயுதச் சந்தையில் ஆயுதங்கள் வாங்குவதில் சில சிக்கல்கள் ஏற்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் தற்போது விடுதலைப்புலிகளுக்கு அனுக்கமான அரசியல் சூழ்நிலை நிலவி வருகிறது. அதேநேரத்தில், மத்திய அரசு ஈழத் தமிழர் பிரச்னையில் நேரடியாகத் தலையிடுவதையும் தவிர்த்து வருகிறது. இந்தப் பின்னணியில், நாம் இந்த விஷயத்தைப் பார்க்க வேண்டும்.

ராஜீவ் படுகொலைக்கு முன்பு சேலம், கோவை, பொள்ளாச்சி, பல்லடம், ஈரோடு ஆகிய இடங்களில் விடுதலைப்புலிகளுக்காக ஆயுதங்கள் தயாரிக்கப்பட்டு, அவை வேதாரண்யம் வழியாக ஸ்ரீலங்காவுக்குக் கடத்தப்பட்டன. பெட்ரோல், மருந்துப் பொருட்களும் இவ்வாறு கடத்தப்பட்டன. இப்போது, கடலோரத்தில் கெடுபிடி அதிகமாக இருப்பதால் தமிழ்நாட்டிலிருந்து எந்த ஒரு பொருளையும் படகுகள் மூலம் ஸ்ரீலங்காவுக்கு எடுத்துச் செல்வது இயலாது. அதனால், விடுதலைப்புலிகள் தமிழ்நாட்டில் ஆயுதங்களைத் தயாரித்து,

ஆந்திராவுக்கு எடுத்துச்சென்று, அங்கிருந்து நெல்லூர் வழியே மசூலிப்பட்டினம் கடற்கரைக்குப் போய், அங்கிருந்து ஸ்ரீலங்காவுக்கு எடுத்துப் போகிறார்கள்.

ராஜீவ் படுகொலைப் புலனாய்வின்போதே, பல்வேறு விடுதலைப்புலிகள் மற்றும் அவரது ஆதரவாளர்களை விசாரித்தபோது, புலிகளுக்கும், ஆந்திராவின் பி.டபிள்யூ.ஜி. என்று அழைக்கப்படும் மக்கள் போர்ப்படை நக்சல் இயக்கத்தும் தொடர்பு உண்டு என்பதும், இவர்களுக்குப் புலிகள் ஆயுதப் பயிற்சி அளித்தார்கள் என்பதும் தெரிய வந்தது. எனவே, அந்தத் தொடர்பு காரணமாக,



* ரகோத்தமன்

எப்படி சாத்தியம்?

ஆயுத உற்பத்தி செய்ய மிகப்பெரிய அளவில் வசதிகள் தேவை இல்லை. காரணம், சாதாரணமான லேத் பட்டறைகள் பலவற்றில், ஆயுதங்களின் ஒவ்வொரு



# பூங்கா?

ஆந்திர நக்சல்கள், புலிகளின் ஆயுதக் கடத்தலுக்கு உதவக்கூடும்.

ஆந்திராவில் பிடிபட்ட ஆயுதங்கள், சென்னை அம்பத்தூரில்தான் தயாரிக்கப்பட்டுள்ளன என்பது உறுதியாகி இருக்கிறது. ஏராளமான உற்பத்தித் தொழிற்சாலைகள் சென்னை நகரில் இயங்கி வந்துள்ளன. இது

பகுதியையும் தனித்தனியாக உருவாக்கி, அவற்றை ஓரிடத்தில் அசெம்பிள் செய்துவிடுவார்கள். லேத் பட்டறைக்காரர்களுக்கு, தாங்கள் உருவாக்கிக் கொடுத்துக் கொண்டிருப்பது வெடிகுண்டின் பகுதி என்றோ, அபாயகரமான ராக்கெட் லாஞ்சரின் ஒரு பாகம் என்றோ தெரிந்திருக்காது.

சாதாரணமாக போலீசார், சந்தேகம் வந்தால்தான்





**தமிழ்நாட்டில் நக்சலைட் தீவிரவாத நடவடிக்கைகளை முற்றிலுமாக ஒடுக்குவதில் முக்கிய பங்காற்றியவர் வால்டர் தேவாரம். அவரைச் சந்தித்துப் பேசினோம்.**

"தமிழ்நாட்டின் தர்மபுரி, திருப்பத்தூர் போன்ற பகுதிகளிலும், ஆந்திராவின் பகுதிகளிலும் ஏறத்தாழ ஒரே சமயத்தில்தான் நக்சலைட் தீவிரவாதம் தலை தூக்கியது. தமிழ்நாட்டில் ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்கள் இரும்புக்கரம் கொண்டு நக்சலைட்டுகளை ஒடுக்க காவல்துறைக்கு முழுமையான சுதந்திரம் அளித்ததுடன், நக்சலைட்டுகளின் மறுவாழ்வுக்கு வழி செய்தார்கள். அதன்படி நக்சலைட் இயக்கத்துடன் தொடர்பு கொண்ட - ஆனால், கொலை, கொள்ளை குற்றம் புரியாத சுமார் ஐம்பது இளைஞர்களை, காவல்துறையிலேயே வேலைக்கு எடுத்துக்கொள்ள நான் நடவடிக்கை எடுத்தேன்.

ஆனால், ஆந்திராவில் அடுத்தடுத்து வந்த அரசுகள் நிலையான ஒரு கொள்கையினைக் கடைபிடிக்கவில்லை. முதல் அமைச்சராகப் பொறுப்பேற்றுக் கொண்டவுடன், என்.டி. ராமராவ், 'லால் சலாம்' என்று சொல்லி நக்சலைட்டுகளுக்குக் கௌரவம் அளித்து, பேச்சுவார்த்தைக்கு அழைத்தார். அவர்கள் பேச்சுவார்த்தையின்போது கிடைத்த கால அவகாசத்தை, இயக்கத்தில் புதிய ஆட்களை சேர்த்துக்கொள்ளவும், ஆயுதங்கள் வாங்கவும்தான் பயன்படுத்திக் கொண்டார்கள்.

சந்திரபாபு நாயுடு, நக்சலைட்டுகள் விஷயத்தில் மிகவும் கடுமையாக நடந்து கொண்டார். அவர்கள் நாயுடுவை, தங்கள் ஏரியாவுக்கு வெகுதூரம் தள்ளி, திருப்பதியில் வைத்துக் கொல்ல முயற்சி செய்தார்கள். ஆட்சி மாறி, முதல்வரான ராஜசேகரரெட்டி, மறுபடியும் பேச்சுவார்த்தை நடத்தினார். அதுவும் தோல்வியடைய, மீண்டும் ஆரம்பித்த இடத்துக்கே வந்துவிட்டது நக்சலைட் பிரச்னை.

தமிழ்நாட்டைப் போல, ஆந்திராவில் காவல்துறைக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டிருந்தால், அங்கேயும் பிரச்னை எப்போதோ முடிவுக்கு வந்திருக்கும். அதை செய்யத் தவறியதால், இன்னமும் நக்சலைட் பிரச்னை தொடர்கதையாகவே உள்ளது. அதன் விளைவுதான், இந்த ஆயுதத் தயாரிப்பும், பரிமாற்றமும்!" என்கிறார் தேவாரம்.

யாரையும் விசாரிப்பார்கள். எந்த ஒரு தொழிற்சாலைக்கும் சென்று யார் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று போலீஸ் பார்க்க முடியாது. ஏதாவது புகார் அல்லது சந்தேகத்தின் பேரில்தான் போய் சோதனை போட முடியும்.

அம்பத்தூர் ஆயுதத் தயாரிப்பு விஷயம், தமிழக காவல்துறையின் 'கியூ' பிராஞ்சின் தோல்வி. அந்தத் துறையின் பணியே, தீவிரவாத நடவடிக்கைகள் குறித்து கண்காணித்து, உரிய நடவடிக்கை எடுப்பதுதான். இங்கே ஏழெட்டு ஆயுதத் தொழிற்சாலைகள் ராக்கெட் லாஞ்சர்கள் உள்ளிட்ட ஆயுதங்களைத் தயாரித்து, நம் போலீஸ் கண்ணில் மண்ணைத் தூவி விட்டு, அண்டை மாநிலத்துக்குக் கடத்திக் கொன்றன. ஆந்திர மாநில போலீஸ் இதைக் கண்டுபிடித்ததால்தான், இந்த ஆயுதக் கடத்தல் விவகாரம் வெளிச்சத்துக்கு வந்திருக்கிறது.

காவல் துறையின் ஸ்பெஷல் பிராஞ்ச்சும் கியூ பிராஞ்ச்சும் இப்போது பலவீனமாகிவிட்டன. மாநிலத்தில் யார் ஆட்சி செய்தாலும், எதிர்கட்சியினரை உளவு பார்க்கவே இவர்கள் பயன்படுத்தப்படுகிறார்கள். தீவிரவாத நடவடிக்கைகளை ஒடுக்குவதற்கு 'பொலிட்டிக்கல் வில் பவர்' வேண்டும். அது இப்போது இல்லை" என்கிறார் ரகோத்தமன்.

படம் : ஸ்ரீஹரி

இப்படித்தான்

# கெமிக்கல் காஸ்மெடிக்ஸ்

## உங்கள் சருமத்தை பாதிக்கின்றது

கெமிக்கல் காஸ்மெடிக்ஸ் நன்மையை விட
தீமையே அதிகம் ஏற்படுத்துகிறது,
சூரிய ஒளியில் வெளிப்படும் பொழுது
சருமத்தின் அணுக்களை பாதிக்கின்றது.

**அறிமுகமாகிறது**

இயற்கையான சருமம் மற்றும்
மேனி பராமரிப்பிற்கான வகைகள்

Team
EUBIO CARE
FOR WELLNESS

## Team Eubio Care's
### SKIN AND BODY CARE RANGE

டீம் யூபையோ கேர்ம் இருக்கிறது இயற்கையான உன்னத மூலிகைகள் மற்றும் கற்றாழையின் கலவைகளினால் தயாரிக்கப்பட்ட சருமம் மற்றும் மேனி பராமரிப்பு பொருட்கள்.

டீம் யூபையோ கேரின் சருமம் மற்றும் மேனி பராமரிப்பு பொருட்கள் டையோ-க்ளென்சர், [illegible] க்ரீம், [illegible] ஜெல், ஸ்கின் டோனர், பாடி லோஷன், ஃபுட் க்ரீம், [illegible] ஆகியவை உள்ளடக்கியது.

**இயற்கையின் குணநலனை அனுபவியுங்கள்,**
**கெமிக்கல் காஸ்மெடிக்ஸ்களுக்கு குட்பை சொல்லுங்கள்**



Team
Health Shoppe

பிரத்யேக கடைகள்:
**வண்டலூர்** - ஸம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. சாலை,
சென்னை-600 048, தொ.பே.044-22750502
**அண்ணா நகர்** - பிளாட் எண்.1200, Z பிளாக்,
6வது அவென்யு, சென்னை-600040, தொ.பே.98410 26997
**விரைவில் இந்திரா நகரில்...**

**Team Eubio Care**
ஸம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. சாலை,
சென்னை-600 048, தொ.பே.044-22750502
விபரங்களுக்கு 044 - 2275 0502 தொடர்பு கொள்ளுங்கள்

# ரஸிகா



அரங்கம் நிரம்பிப்போய், மேடையிலும் ரசிகர்கள் உட்கார்ந் திருக்கிறார்கள்– விசாகா ஹரியின் ஹரிகதை நிகழ்ச்சியில். 'மீரா பாய்' கதையைக் கேட்க வந்திருக்கும் பெருங்கூட்டத்தில், எட்டு வயது சிறுமி பாவாடை சட்டை அணிந்து உட்கார்ந்து பரவசமாகக் கேட்கிறாள். எண்பதைத் தொட விருக்கும் மாமியும் உண்டு. நடுத்தர வயதுப் பெண்கள்; அலுவலக வேலையைச் சீக்கிரமே முடித்துக் கொண்டு வந்திருக்கும் ஆண்கள்... மேடைக்கு ஏறும் படிக்கட்டில் கூட ஒரு மூதாட்டி அமர்ந்திருக் கிறார்! சங்கீதக் கச்சேரிகளில் தென்படும் முகங்களோடுகூட சல்வார் கமீஸ் - குட்டை முடி - குர்தா பைஜாமா ரக கூட்டமும் விரவிக் கலந்திருக்கிறது.

விசாகா மடிசார் புடைவை உடுத்திக்கொண்டு, எளிமையான, பளிச்சென்ற தோற்றத்துடன், அனாயாசமாகப் பாடி மீரா பாயின் கதையை நகர்த்திச் செல் கிறார். அவர் குரல் மட்டும் கதையைச் சொல்லவில்லை; கைகளும் முகமும் குரலோடு சேர்ந்து கதை சொல்கின்றன. கண்கள் ஆச்சரி யத்தில் விரிகின்றன; சோகத்தில் நனைகின்றன. கரங்கள் சிப்ளாக் கட்டையைச் சலசலவென்று தட்டுகின்றன. மீரா தன் தோழிப் பெண்களுடன் கோகுலாஷ்டமி கொண்டாடுகிற கட்டத்தில், அதே சிப்ளாக் கட்டைகள் கோலாட்டக் கழிக ளாக மாறி, கைக்கு ஒன்றாக இடம்பெற்று சப்திக்கின்றன.

சற்றைக்கெல்லாம் மீரா கிளியோடு உரையாட, விசாகாவின் வலக்கரம் கிளி யாக மாறி படபடவென்று சிறகடித்து அவர் இடக்கரத்திலுள்ள தானியத்தைக் கொத்த வருகிறது. மீரா கையை இறுக்கி மூடிக்கொண்டு "ராதே கிருஷ்ணா சொன் னால்தான் தருவேன்'' என்கிறாள்– கிளியை நோக்கி!

மீரா பஜனுடன் ஆரம்பித்து மீரா பஜனுடன் முடியும் இந்நிகழ்ச்சியில் பெரும்பாலான நேரம் விசாகா பாடு கிறார். கணீரென்ற குரலில், ஹிந்துஸ்தானி ராகங்களிலமைந்த பஜன்கள். சங்கதிகளை இரண்டிரண்டுமுறை தப்பாமல், தவறாமல் பாடுகிறார். விடேன், தொடேன் என்று பாடல் வரிகளிடையே நிறுத்திக் கார்வை சுழற்றுகிறார்; பிருகாக்களும் ரவை சங்கதிகளுமாகக் கட்டுக்கடங்காமல் பாய்கிறது கற்பனைப் பிரவாகம்!

பக்தியும் உணர்ச்சியும் கதை விவரிப்பில் நிறைந்திருக்க; வர்ணனை களும் பாவங்களும் அழுத்தமான விஷுவல் எஃபெக்ட் தருகின்றன– நிகழ்ச்சிக்கு.

ரசிகர்களின் ஆர்வத்துக்கும் பரவசத்



• விசாகா ஹரி

# அப்துல் கலாமின் கனவு!



துக்கும் பிரதான காரணம் இந்த விஷுவல் எஃபெக்டும் இசையின் ஈர்ப்பும்தான் என்பது புரிகிறது.

இவ்வளவு தோய்ந்துபோய் கதை சொல்லும் விசாகா ஹரி, தம்மெதிரே குறிப்புப் புத்தகங்களை வைத்துக் கொண்டு, அவற்றைப் புரட்டியும் மாற்றியும் சிரமப்படாமல், சுயமாகப் பொழிகின்ற நன்னாளில் அவரது வெற்றி பூரணமாகும்.

"ஸ்ரீ அண்ணா சொல்வார்" என்று ஸ்ரீ கிருஷ்ண பிரேமி சுவாமிகளை மட்டுமே மேற்கோள் காட்டாமல், பலப்பல ஆன்மிகப் பெரியோர்களின் கருத்துகளையும் புராண இதிகாசத் தெறிப்புகளையும் தமது உரையில் உள்ளடக்கி வழங்கும் தினத்தில் அவர் நிகழ்ச்சிகள் ஆழமும் அழுத்தமும் பெறும்.

அதே ஆழமும் அழுத்தமும் அவருடைய பிரவாகமான இசைக்கு அணை போட்டு, அதில் பக்தியைத் ததும்ப நிரப்பும்; இசையை அளவோடு பாய்ச்சி உள்ளங்களைப் பண்பட்ட விளைநிலங்களாக்க உதவும்.

இந்தக் குரலும் கலையும் மட்டும் கிராமப்புறங்களில் அரங்கேறி எளிய மக்களிடம் பேசிப்பாடுமானால் இந்தியா மேன்மையுறும்.

விசாகா ஹரி போல மாநிலத்துக்கு நாலு பேர் கிராம நிகழ்ச்சிகள் வழங்கினாலே, அப்துல் கலாமின் இந்தியக் கனவு அவசர அவசரமாக நிறைவேறிவிடும்!

அட்டை, படங்கள் : ஸ்ரீஹரி

## பிரியன்



தமிழக காங்கிரஸ், கோஷ்டிப் பூசலின் உச்சகட்டத்தில் சிக்கித் தவிக்கிறது. தமிழகத் தலைவர் கிருஷ்ணசாமிக்கும் தமிழக மேலிடப் பார்வையாளர் வீரப்பமொய்லி மற்றும் வாசன் கோஷ்டிக்குமான மோதல் பகிரங்கமாக வெடித்துள்ள சூழ்நிலையில், நாம் கிருஷ்ணசாமியைச் சந்தித்துப் பேசினோம்... எடுத்தவுடனே குமுறத் தொடங்கிவிட்டார்...

"அன்னை சோனியாகாந்தி அவர்கள் என்னைத் தலைவராக நியமித்ததற்கு மூன்று காரணங்கள் உண்டு. எந்தக் கோஷ்டியிலும் சேராமல் இருந்தது. மிக மூத்த கட்சிக்காரன்; காங்கிரஸ் கட்சிக்கும் நேரு குடும்பத்துக்கும் விசுவாசமாக இருப்பவன். பதவிக்கு வந்தபோது முக்கியப் பிரமுகர்கள் என்னை வரவேற்றபோது மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். அதன் பிறகு சட்டமன்றத் தேர்தலில், கூட்டணியில் 48 இடங்கள் கொடுக்கப்பட்டன. அத்தனை இடங்களையும் கேட்டு மோதியது ஒரு தரப்பு. விசுவாசமான கட்சிக்காரர்களுக்கு சீட்டு வாங்கிக் கொடுப்பதற்குக் கூட போராட வேண்டி இருந்தது. அந்தச் சீட்டுப் பங்கீட்டு விவகாரத்தில் தலைவராக இருந்த என்னை மாற்றச் சொல்லியும் கேட்கவில்லை.

தேர்தல் முடிந்ததும் வாக்குச்சாவடிக் குழு மற்றும் கிராம நிர்வாகக் குழு போடுவதற்காக தமிழகமெங்கும் செல்ல விரும்பினேன். ஆனால் குறிப்பிட்ட தரப்பு புறக்கணித்தது. இருந்தும், ப.சிதம்



# "என்னை அவமானப் படுத்தினார்கள்!"

## –கிருஷ்ணசாமி குமுறல்

அவமானப் படுத்தினார்கள். இருந்தாலும் கட்சியின் வெற்றிக்காக பொறுமையுடன் உழைத் தேன். அதிக சீட்டுகள் கேட்டுப் பெற்றுக் கொண்ட தரப்பின் வேட்பாளர்கள் சரியில்லாததால்தான் முழு வெற்றிபெற முடியவில்லை. அவர்களை

பரம், ஈ.வி.கே.எஸ்.இளங்கோவன், மணி சங்கர் அய்யர் ஆகியோருடன் சில மாவட்டங்களுக்குச் சென்று கூட்டம் மட்டுமே நடத்த முடிந்தது. எல்லாரையும் அனுசரித்து கட்சியை வளர்த்திட நான் முயலும்போது, ஒரு குறிப்பிட்ட தரப்பு

மட்டும், தலைமையை லட்சியம் செய் யாமல் தனி ஆவர்த்தனம் வாசிப்பது எந்த விதத்தில் சரி? அந்தக் குறிப்பிட்ட தரப்பினால் கட்சிக்கு எந்தப் பயனும் இல்லை.

தமிழக இளைஞர் காங்கிரஸ் மது ரையில் நிகழ்ச்சி ஒன்றை நடத்தியது. அதில் என்னைக் கலந்துகொள்ளச் சொன்னார்கள். ஆனால், அன்று சிதம் பரத்தில் ராஜீவ் காந்தி சிலை திறப்பு விழா இருந்தது. எனவே வேறு தேதி யில் வைக்குமாறு கேட்டுக்கொண் டேன். ஆனால் அவர்கள் அன்றே வாசனைக் கூப்பிட்டு நிகழ்ச்சியை நடத்தினார்கள். தமிழ்நாடு காங்கிரஸ் தலைமை அந்த நிகழ்ச்சியில் இருட் டடிப்பு செய்யப்பட்டதாக பலரும் என்னிடம் கூறினர்.

சட்டமன்றத் தேர்தலின்போது வேலூர் மாவட்டத் தலைவர் முனிரத் தினம் ராஜினாமா செய்தார். எனவே 12 பேர்கொண்ட பொறுப்புக் குழுவை நியமித்தேன். பின்னர் உள்ளாட்சித் தேர்தலில் காங்கிரஸின் வெற்றி வாய்ப்பைத் தெரிந்துகொள்ள பார்வையாளர்களை நியமித்தேன். ஆனால் அது தேவையில்லையென்றும், வேலூர் மாவட்டத் தலைவர் தொடர்கிறார் என்றும் எனக்குக் கடி தங்கள் எழுதினார் மொய்லி. அவர் எனக்குக் கடிதம் எழுதியது உட்கட்சி விவகாரம். அது எப்படி பத்திரி கைகளில் வெளிவந்தது? கட்சி விவ காரங்கள் குறித்து வெளியில் பேசக் கூடாது, எனக்கு நன்றாகவே தெரியும். ஆனால் எனக்கு எழுதப்பட்ட கடிதம் பத்திரிகையில் வெளியான காரணத் தினால் தான் பேச நேர்ந்தது. உள்ளாட் சித் தேர்தலில் வெற்றி வாய்ப்பைத் தெரிந்து கொள்ள பார்வையாளர்களை அமைத்தது சரிதான். இதுபோல முன்பு தேர்தல் நடந்தபோதும் அமைத் திருக்கிறோம். அது போல மாவட்டத் தலைவர் ராஜினாமா செய்தபிறகு, பொறுப்பாளர் களை நியமிக்க எனக்கு உரிமை உண்டு.

மேலும் தமிழக காங்கிரஸின் ஒழுங்குநடவடிக்கைக் குழுத் தலைவர் உறுப்பினர் பட்டியல் எனக்குத் தெரியாமல் அறி விக்கப் பட்டுள்ளது. வீரப்ப மொய்லி தமிழக காங்கிரஸின் சின்னச் சின்ன விவகாரங்களில் கூட ஏன் தலையிடுகிறார் என்று தான் புரியவில்லை. அன்னை சோனியாவின் கட்டளையை நிறைவேற்றுவதே என் கடமை. நாங்கள் எல்லோருமே அவருக்கு மட்டுமே கட்டுப்பட்டவர்கள்."

**இப்படி உங்களுக்குள்ளேயே மோதிக் கொண்டால் வரும் உள்ளாட்சித் தேர்தலில் தோல் வியைச் சந்திக்க நேருமே?**

"கலைஞர் அவர்கள் மிகச் சிறப்பாக ஆட்சி நடத்துகிறார். எனவே எங்கள் கூட்டணி மகத்தான வெற்றி பெறும். எங்கள் உட்கட்சிப் பிரச்னைகள் எந்த விதத்திலும் கட்சியின் வெற்றியைப் பாதிக்காது."




• படம் : ஸ்ரீஹரி

ஆரோக்கியம்

# சென்னைக்கு

சௌந்தர்யா 

* காயங்கள் ஏற்பட்டால், முறையான சிகிச்சையளிக்காமல் அலட்சியமாக விட்டுவிடுபவரா நீங்கள்? * ஸ்டீராய்டு மருந்துகளை அதிகளவில் உட்கொள்பவரா? * சதா டூவீலரைக் கட்டிக் கொண்டு மாரடிப்பவரா? 'ஆம்' எனில் இந்தக் கட்டுரை உங்களுக்குத்தான்.

மேற்கண்ட காரணங்களால்தான் பெரும்பாலானவர்கள் இன்றைக்கு இடுப்பு மூட்டு வலியைச் சந்திக்கிறார்கள். இதனைச் சாதாரணமாக எடுத்துக்கொண்டு கவனிக்காமல் விட்டுவிட்டால், அதுவே வேறு பல பிரச்னைகளுக்கு அடிப்படையாக அமைந்து விடுகிறது. இடுப்பு மூட்டு இன்னல்களிலிருந்து இனி எளிதாக விடுபட்டு விடலாம். 'பர்மிங்ஹாம் ஹிப் ரீசர்ஃபேஸிங்' என்றொரு புதிய நவீன சிகிச்சை இதற்குக் கைகொடுக்கிறது. இது இடுப்பு மூட்டு வலியை நிரந்தரமாக குணப்படுத்துகிறது.

இது குறித்து இடுப்பு மூட்டு அறுவை சிகிச்சை நிபுணரும், சென்னை நந்தனம் அப்பல்லோ மருத்துவமனை மனித உடற்மூட்டுச் சீரமைப்பு நிலைய தலைமை மருத்துவருமான விஜய் சி.போஸிடம் பேசினோம்.

"ஆசியாவிலேயே தமிழ்நாட்டில்தான் மருத்துவப் புரட்சி நடந்தேறி வருகிறது. உலக நாடுகளிலிருந்து ஏராளமானோர் தமிழ்நாட்டுக்கு, குறிப்பாக சென்னைக்கு மருத்துவத்தை நாடிப் படையெடுத்து வருகிறார்கள். காரணம் நல்ல மருத்துவ சேவை, மிகக் குறைந்த கட்டணத்தில் கிடைப்பதுதான். அந்த வகையில் பார்க்கும்போது இடுப்பு மூட்டு அறுவை சிகிச்சைக்கென வருபவர்கள் அநேகம் பேர். நம்பி வருபவர்களுக்கு நல்லதொரு வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது 'பர்மிங் ஹாம் ஹிப் ரீசர்ஃபேஸிங்' அறுவை சிகிச்சை" என்று கூறும் டாக்டர் விஜய் சி.போஸ், தொடர்ந்து இடுப்பு மூட்டு வலி மற்றும் புதிய சிகிச்சை முறையைப் பற்றி விளக்கினார்...

"இன்றைக்கு இருதய நோய், நீரிழிவு நோய் மாதிரி இடுப்பு மூட்டு வலியும் மிகச் சாதாரணமாக இளம் வயதினரிடையே பரவி வருகிறது. இதனால் பெண்களை விட நடுத்தர வயது ஆண்கள்தான் அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள்.

* டாக்டர் விஜய் சி.போஸ்



முதலில் இடுப்பின் கீழ் பாகத்தில் இந்த வலி தொடங்கும். நடக்கும் தூரம் படிப்படியாகக் குறையும். தூக்கத்தின்போது இடுப்பில் வலி உண்டாகும். சிலருக்குக் கால் பிடிப்பு ஏற்படலாம். இடுப்பு மூட்டில் தேய்மானம் ஏற்பட ஆரம்பிப்பதால் கால்கள் குட்டையாகிவிடும் அபாயம் இருக்கிறது. மோட்டார் சைக்கிள் ஓட்டுவதும் கழிவறையில் உட்கார்ந்து எழுந்திருப்பதும் மிகவும் கடினமாக இருக்கும். உடல் எடை அதிகமுள்ளோர், கால்களைச் சீரற்ற முறையில் வைத்து உட்காருவோர் கவனமாக இருந்தால் இந்த இடுப்பு மூட்டு வலி வருவதைத் தடுக்கலாம்.

முன்பெல்லாம் இதற்கு அறுவை சிகிச்சை என்பது, பாதிக்கப்பட்ட இடுப்பு மூட்டை முழுவதுமாக அகற்றி விடுவதுதான். முதியவர்கள் என்றால் பிரச்னை இல்லை. இளைய வயதினருக்கு இந்த அறுவை சிகிச்சை செய்வது கடினம். காரணம், சிகிச்சைக்குப் பிறகு இடுப்பு வலி நின்றுவிடும். ஆனால் இடுப்புக்கு அசைவு கிடைக்காது. நடப்பது சிரமமாக இருக்கும். நாற்பது வயதில் நடக்க முடியாது. அதனால் வயதாகும்வரை நோயாளிக்கு அறுவை சிகிச்சையை மருத்துவர்

கள் தள்ளிப் போடுவது வழக்கம்.

'பர்மிங்ஹாம் ஹிப் ரீசர்ஃபேஸிங்' என்னும் இடுப்பு மூட்டுச் சீரமைப்பு சிகிச்சையில் இந்தப் பிரச்னை இல்லை. சிகிச்சைக்குப் பிறகு வழக்கமாக எல்லா வேலைகளையும் செய்யலாம். மோட்டார் சைக்கிள் ஓட்டலாம், நீந்தலாம், கால் பந்துகூட விளையாடலாம். அத்தனை சிறப்பு வாய்ந்த சிகிச்சை இது. இம்முறையில் இடுப்பு மூட்டு முழுமையாக நீக்கப் படுவது இல்லை. அதன் இயற்கையான அமைப்பு மாற்றப்படுவதில்லை. அச்சு அசலான ஒரு மெட்டல் பந்து சிரமமில்லாமல் உருளுவதற்கான குழியில், மூட்டின் இடத்தில் பொருத்தப்படுகிறது. இது இடுப்பு மூட்டின் வேலையை நூறு சதவிகிதம் செய்யக்கூடியதாக வடிவமைக்கப்பட்டிருக்கிறது. பழைய அறுவை சிகிச்சையில் பொருத்தப்படும் பாலி எத்திலீன், நாளாக நாளாக வேலையின் அளவைப் பொருத்துச் செயலிழக்க ஆரம்பித்துவிடும். ஆனால் இந்த பர்மிங்ஹாம் சிகிச்சை முறையில் அப்படி ஆவதில்லை. இது 99 சதவிகிதம் பலன் தருகிறது. சிகிச்சைக்குப் பிறகு மூட்டு நழுவல்கள் ஏற்படுவதில்லை.

இந்த ஹிப் ரீசர்ஃபேஸிங் சிகிச்சையை 1960-ஆம் ஆண்டில் முதன் முதலில் ஆரம்பித்தவர் சர் ஜான் சான்லி என்கிற டாக்டர். ஆனாலும் ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு லண்டன் பர்மிங்ஹாம் ஆர்த்தோ மையத்தில்தான் வெற்றி கிடைத்தது. மூன்று மணி நேரத்தில் முடிந்துவிடும் இந்த அறுவைக்கு அடுத்த நாளே நடக்கலாம். மூன்றாவது நாள் வீட்டுக்குத் திரும்பி விடலாம், மூன்றாவது வாரத்தில் நமது வழக்கமான வேலைகளை ஆரம்பித்து விடலாம்'' என்று கூறும் டாக்டர் விஜய் சி.போஸ், குறைந்த கட்டணத்தில் இச்சிகிச்சை செய்து கொள்ள அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளிலிருந்து சென்னைக்கு வரும் பல நோயாளிகளின் வாழ்வை மீட்டெடுத்துள்ளார்.

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# வரும் அமெரிக்கா!



"இனி இல்லை இடுப்பு மூட்டு இம்சை!"



# கல்கி



2006 அக்டோபர் 1
விய புரட்டாசி 15
மலர் : 65
இதழ் : 9

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## சந்தேக ஒப்பந்தம்!

இந்தியாவும் பாகிஸ்தானும் இணைந்து பயங்கரவாத எதிர்ப்புக்கான அமைப்பு ஒன்றை நிறுவுவது சாத்தியமா ...? சொல்லளவில் இது சாத்தியம் என்று முஷாரஃப்பும் மன்மோகன் சிங்கும் உரையாடி ஒப்பந்தமும் போட்டுவிட்டார்கள். ஆனால், செயலளவில்...?

கடந்த ஜூலை மாதம் மும்பையில், ஓடும் ரயில்களில் குண்டு வெடித்து அநியாயமாய் உயிர்களைக் கொள்ளை கொண்டபோது, பாகிஸ்தானின் ஆதரவும் அங்கீகாரமும் பெற்ற பயங்கரவாத அமைப்புகளே அதற்குக் காரணம் என்பது உறுதி செய்யப்பட்டது.

இஸ்லாமிய பயங்கரவாதத்தின் ஊற்றுக்கண் பாகிஸ்தான் என்னும்போது, அந்நாட்டு அரசாங்கமே இந்த பயங்கரவாத அமைப்புகளுக்குப் பொருளுதவியும் ஆயுத உதவியும் செய்கிறது என்னும்போது, அதே பயங்கரவாதத்தை எதிர்க்க அந்நாடு இந்தியாவுடன் கைகோத்து அமைப்பு நிறுவுகிறது என்பது நம்பக் கூடிய விஷயமே அல்ல.

அப்படியே சொன்ன சொல்லைக் காப்பாற்ற ஓர் அமைப்பு நிறுவப்பட்டாலும் அது எவ்வளவு தூரம் வெற்றிகரமாக இயங்கிவிட முடியும்? "இந்த அமைப்பு சரியாகச் செயல்பட்டுப் பயனளிக்காவிட்டால் பயங்கரவாதத்தை வேறு விதங்களில்தான் முறியடிக்க முயற்சி செய்ய வேண்டும்" என்று பிரதமர் ஒப்பந்த மை உலர்வதற்கு முன்பே சொல்லிவிட்டார்.

பரஸ்பரம் சந்தேகத்துடனும் எதிர்ப்புணர்வுடனும் நோக்கும் இரு நாடுகள் உளவுத் தகவல்களைப் பகிர்ந்துகொள்ள முடியுமா..? அது சாத்தியமேயில்லை. கிடைத்த தகவல்கள் முழுமையானவையா, உண்மையானவையா என்ற சந்தேகம் இருந்து






கொண்டே இருக்கும். எந்த முடிவுக்கும் எளிதில் வந்து, எந்த நடவடிக்கையையும் உறுதியாக எடுக்க முடியாமல் போகும்.

மன்மோகன் சிங் - முஷாரஃப், அணிசாரா நாடுகள் உச்சி மாநாட்டில் சந்தித்ததால் விளைந்துள்ள ஒரே நற்செயல், முறிந்துபோன இந்தோ-பாக் பேச்சுவார்த்தை மீண்டும் தொடர்ந்திருப்பதுதான். அயலுறவுத்துறை அமைச்சர் இல்லாத நிலையில், பிரதமர் தமது நட்பான அணுகுமுறையினால் இதைச் சாதித்துள்ளார் என்பதை வரவேற்போம்.

இந்த முன்னேற்றத்தின் காரணமாக, அவர் பாகிஸ்தான் செல்ல இருப்பது மற்றும் ஒரு வரவேற்க வேண்டிய முடிவு. நீட்டப்பட்டுள்ள நேசக்கரத்தைப் பற்றியிருக்கும் பாரதப் பிரதமர், பாகிஸ்தானுடன் உறவுகள் மேம்படுவதற்கு அதைப் பயன்படுத்த வேண்டும். இந்தியா - பாகிஸ்தானிடையே பிரச்னையாக நீடித்துவரும் - எல்லைக்கோடு, பாக் ஆக்கிரமிப்பு காஷ்மீர், ஒட்டுமொத்த காஷ்மீர் மக்களின் கருத்தறிந்து அதற்கேற்ப அங்கு அரசியல் தீர்வு காண முயற்சி செய்வது போன்ற அம்சங்களைப் பேசித் தீர்வு காண நல்லதொரு பிடிமானம் இப்போது இந்தியாவுக்குக் கிடைத்திருக்கிறது.

'பயங்கரவாதத்தை நிறுத்தினால்தான் பேசுவோம்' என்கிற பா.ஜ.க. அரசின் கோட்பாடிலிருந்து மாறி, இன்றைய மத்திய அரசு நிபந்தனைக்குட்படாத பேச்சு வார்த்தைகளைத் துவக்குவது நல்லது. காஷ்மீர்ப் பிரச்னையைக் கௌரவப் பிரச்னையாகப் பாராமல், அங்குள்ள மக்களின் பிரச்னையாகப் பார்ப்பது அவசியமாகிறது. அவர்களின் கண்ணீரைத் துடைக்கவும் ஆயுதங்களுக்கும் பாதுகாப்புக்கும் இரு நாடுகளுக்கும் ஆகிற செலவைக் குறைத்து அமைதியை நிலைநாட்டவும் தேவையான அளவு விட்டுக் கொடுப்பதில் தவறில்லை.

சென்ற வாரம் கையொப்பமான பயங்கரவாதத் தடுப்பு ஒப்பந்தத்தின் வார்த்தை ஜாலங்களை நம்பி, முதலில் அமைதி நிலவட்டும்; அதன் பிறகு அரசியல் தீர்வு பற்றி ஆராயலாம் என்று காத்திருந்தால், அபாயம் அதிகரிக்கவே செய்யும். மாறாக, பாகிஸ்தானுடன் அரசியல் தீர்வு ஏற்பட்டால், அது தொடர்பான பயங்கரவாதத்துக்கு இடமில்லாமலே போகும். இதுவே இந்தியாவை அச்சுறுத்தும் இதர சில பயங்கரவாத அமைப்புகளை வெற்றி கொள்ளவும் உதவும். ●

தஞ்சை பரத்வாஜ்



# நடக்குமென்பார்; நடக்கும்!

## 24.9.06 முதல் 30.9.06 வரை

ராசிபலன்

**மேஷம்**: மேன்மையான வாரம். தனம், குடும்பம், வாக்குவன்மை மேலோங்கும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். பொருளாதாரச் சிரமம் குறையும். கல்வி வளம் மேலோங்கும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். குழந்தைகளைப் பற்றிய மனக் கவலை தோன்றும். நெருங்கிய நண்பர்கள், உறவினர்கள் விலகிச் செல்வார்கள். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். வீடு, வாகனம் வாங்க ஏற்ற தருணம். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். தொழில் அபிவிருத்தி ஏற்படும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் கவனமாக இருக்கவும். உடல் நிலை நன்றாக இருக்கும். சனி / ராகு / கேது வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.



**ரிஷபம்**: எதிர்பார்புகள் நிறைவேறும் வாரம். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். சிலருக்கு வீடு, தொழில் வழியில் மாற்றம் வரும். உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் நற்பலன் கிட்டும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை நீங்கும். கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் முற்போக்கான சூழ்நிலை ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். திருமணம் கைகூடும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைப்பேறு கிட்டும். குரு வழிபாடு நற்பலனைத் தரும். ராகு / கேது வழிபாடு சிறந்தது.



**மிதுனம்**: எண்ணங்கள் யாவும் ஈடேறும். புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து அணுகும். திருமணம் கைகூடும். பணக் கஷ்டம் விலகும். உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படும். கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். புதிய சொத்துகள் வாங்க நல்ல தருணம். வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். கொடுக்கல் வாங்கல் நல்ல பலனைத் தரும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். பரிகாரம் தேவை இல்லை.

**கடகம்**: சுமாரான வாரம். எதிலும் கவனத்துடன் செயல்படுவது நல்லது. கணவன் - மனைவி அனுசரணை தேவை. கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். வாகனத்தில் செல்லும் போது கவனமாக இருக்கவும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. உணவுக் கட்டுப்பாடு அவசியம். கல்வியில் கவனம் செலுத்தவும். நண்பர்களால் தொல்லை வரலாம். நெருங்கிய உறவினர்கள் பிரிந்து போவார்கள். கூட்டுத்தொழில் செய்பவர்கள் கவனமாக இருக்கவும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வரவும்.

**சிம்மம்**: சற்று முற்போக்கான

வாரம். தடை விலகித் திருமணம் கைகூடும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படும். வேலைப்பளு குறையும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பண வசதி பெருகும். எதிர்ப்பு, தொல்லை விலகும். கல்வி வளம் மேலோங்கும். புதிய முயற்சி கைகூடும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். உத்தியோகத்தில் மாற்றம் ஏற்படும். சுபமான செலவு வரும். சுபகாரிய பேச்சுவார்த்தை வெற்றி அளிக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

# பரத்வாஜ்...

● என் மகள்கள் இருவரும் அடிக்கடி சண்டையிட்டுக் கொள்கின்றனர். சேமிக்கவே இயலவில்லை. வீட்டில் வடமேற்கில் பணப்பெட்டியை வைத்துள்ளேன். இதனால்தான் இப்படியாகிறதா?

**- ஆர்.சீனிவாசன், சென்னை-28**

தென்மேற்கில் குளியலறை இருப்பது பெண்களைப் பாதிக்கும். அதை வடமேற்கு மூலைக்கு மாற்ற வேண்டும். தென்கிழக்கில் உள்ள படுக்கையறையை வடமேற்கு மூலைக்கு மாற்றினால் நிம்மதி ஏற்படும்; பணம் தங்கும்;

**கன்னி**: மகிழ்ச்சிகரமான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். வீடு, வாகனம் வாங்க நல்ல தருணம். திருமணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைப்பேறு கிட்டும். பணக் கஷ்டம் விலகும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். தொழில் வழியில் நல்ல லாபம் கிடைக்கும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். நண்பர்கள், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் கிட்டும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். பரிகாரம் தேவை இல்லை.

**துலாம்**: சுகமான வாரம். தீர்க்க முடியாத சிக்கல் தீரும். பண வரவு காத்திருக்கிறது. தனம், வாக்கு, கல்வி மேலோங்கும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு, வாகனம் வாங்க நல்ல தருணம். மனச்சலனம் தீரும். நெருங்கிய நண்பர்கள், உறவினர்களால் நன்மை ஏற்படும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். கூட்டணியில் கஷ்டம் வரும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். சுபகாரியம் கைகூடும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். வழக்கு வெற்றி பெறும். அநாவசியச் செலவுகள் வரலாம். தூரதேச அழைப்பு வந்து சேரும். பணப் பற்றாக்குறை தீரும். ராகு / கேது / குரு / சனி

திருமணம் கைகூடும்.

● ஏதாவது எதிர்பாராத நிகழ்வுகளால் பாதிக்கப்பட்டு அடிக்கடி மன உலைச்சல் ஏற்படுகிறது? இதற்கு என்ன தீர்வு?

**- எஸ். கண்ணன், செகந்திராபாத்**

உங்களுக்கு சனிதசை. தற்போதைய காலச்சக்கர தசை உங்களுக்கு மன உலைச்சலை அளித்துள்ளது. இந்த தசை முடிவடைந்து அடுத்து வரும் புதன் தசை புதன்புத்தி மாற்றத்தை உருவாக்கும். இப்போது லலிதா சகஸ்ரநாமம் படித்து வர, இன்னல்கள் நீங்கும்.

● என் மகனுக்கு எப்போது வேலை கிடைக்கும்? எப்போது திருமணம்

வழிபடுதல் நலம்.

**விருச்சிகம்**: செல்வாக்கு மிகுந்த வாரம். பணக் கஷ்டம் இருக்காது. ஆடை, ஆபரணம் வந்து சேரும். நாணயம் காப்பாற்றப்படும். வாக்கு வன்மை மேலோங்கும். மன உலைச்சல் தீரும். தொழில் துறையில் முன்னேற்றம் கிட்டும். புதிய முயற்சி பலன் அளிக்கும். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வேலைப்பளு அதிகரிக்கும். உத்தியோகத்தில் இடம் மாற்றம் உண்டு. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். எதிர்ப்பு தொல்லை விலகும். வீடு, வாகனம் வாங்க நல்ல

தருணம். குழந்தைகளை பற்றின மனக் கவலை தீரும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு மாற்றும் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். ராகு / கேது / குரு வழிபாடு உத்தமம்.

**தனுசு:** சிறப்பான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். தெய்வ பலம், ஆத்ம பலம் ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். கடன் சுமை தீரும். சுப காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். பணப்பற்றாக்குறை வராது. எதிர்ப்பு, தொல்லை விலகும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். ஆடை ஆபரணம் வந்து சேரும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் நற்பெயர் கிட்டும். திருமணம் கைகூடும். சிலருக்கு வேலை மாற்றம் ஏற்படும். செலவுகள் சுபமானவையாக இருக்கும். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

நடக்கும்?

**– ஏ.வி.ராஜரத்னம், தாராபுரம்**

உங்கள் மகனுக்கு 39 வயது நடக்கிறது. தற்போது சந்திரதசை நடந்து வருகிறது. இவருக்கு அடிமைப்பணி ஒத்துவராது. சுயதொழில் செய்து சம்பாதிக்கும் ஜாதகர் இவர். சந்திரன் நீசம் பெற்று தசை நடத்துவதால், சரியான வேலை அமையவில்லை; திருமணமும் நடைபெறவில்லை. சுயதொழில் துவங்கினால் பலன் கிடைக்கும். 2008-ல் திருமணம் நடக்கும். மகாவிஷ்ணுவை வழிபட, நற்பலன் கிட்டும்.

# ...பதில்கள்

**மகரம்:** சுமாரான வாரம். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. வாகனத்தில் செல்லும்போது கவனத்துடன் இருக்கவும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உணவுக் கட்டுப்பாடு அவசியம். கணவர் – மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப் போவது நலம்தரும். கூட்டாளிகளிடையே இடையூறுகள் வரலாம். விலகிப் போனவர்களால் மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். எதிலும் அகலக்கால் வைக்கக் கூடாது. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வேலைப்பளு அதிகரிக்கும். தந்தையின் உடல்நிலை பாதிக்கப்படலாம். கல்வியில் அக்கறை செலுத்தவும். திருமணத் தடை ஏற்படலாம். வியாபாரத்தில் சற்று மந்தநிலை இருக்கும். உத்தியோகத்தில் அவசரப்பட்டு இடமாறுதல் செய்யக் கூடாது. ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர, கஷ்டங்கள் குறையும். நற்பலன் ஏற்படும்.

**கும்பம்:** நற்பலன் நிறைந்த வாரம். உடல் ஆரோக்கியம் மேன்மை அடையும். கல்வி வளம் மேலோங்கும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். பொருளாதார மேன்மை உண்டாகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். கணவன்–மனைவி உறவு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். நீண்ட தூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். திருமணம் நடக்கும். எதிர்ப்பு தொல்லை விலகும். ஆடை ஆபரணப் பொருட்கள் வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். புதிய வீடு, மனை வாங்க நல்ல தருணம். புதிய தொழில் முயற்சி கைகூடும். ராகு / கேது வழிபடுதல் நலம்.

**மீனம்:** மனக்குறை விலகி நல்லது நடக்கும் வாரம். தனம், கல்வி, வாக்கு வன்மை மேலோங்கும். பணப் பற்றாக்குறை தீரும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். புதிய முயற்சி பலன் கிடைக்கும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். மன உலைச்சல் தீரும். நீண்ட தூரப்பிரயாண வாய்ப்பு வந்து சேரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். தடங்கல் விலகித் திருமணம் நடக்கும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். கல்வி, வளம் மேலோங்கும். உத்தியோகத்தில் வேலைப் பளு குறையும். புதிய வேலை வாய்ப்பு கிட்டும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

யுகபாரதி



'அமுதம்' எனும் சொல்லுக்கு தமிழகராதியில் சோறு, நீர், உப்பு, தயிர், பூமிச் சருக்கரை, காட்டுக் கொஞ்சி, திரிபலை, திரிகடுகம், வீடுபேறு ஆகியன பொருள்களாகத் தரப் பட்டுள்ளன. உண்மையில், அமுதம், சுவை மிகுந்த திரவம் என்பதாக யாரும் சொல்லாமல் நானாகப் புரிந்து வைத்திருக்கிறேன்.

ஒரு சராசரிக்குக் கிட்டாத தேவ பானத்துக்கு நிகரானதாகவோ, வானவர்கள் மாத்திரமே அருந்தக்கூடிய அற்புத வஸ்துவாகவோ நம்மில் பலரும் அமுதத்தை நினைத்திருப்போம். அசுரர்களும் தேவர்களும் ஆளுக்கொரு பக்கம் நின்று பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்ததாகச் சொல்லப்படும் தெய்வக் கதை உள்பட அமுதத்துக்கு நம்மிடம் அநேக ஆர்வமுண்டு. ஆனால், அமுதத்தை நாம் அறிவது வார்த்தையாக மட்டுமே.

'அமுதைப் பொழியும் நிலவே நீ அருகில் வராததேனோ' என்ற பாடலைக் கேட்குந்தோறும் அமுத நினைவுகள் என்னை ஆட்கொண்டு விடும். தேடிக் கிடைக்காது என மனதைச் சாந்தப்படுத்தி பி.சுசிலாவின் குரலில் அமுதுண்ட கிறக்கத்தைப் பெறுவேன். 'தங்கமலை ரகசியம்' திரைப் படத்தில் இடம்பெறும் இப் பாடலை எழுதியவர், கு.மா.பாலசுப்ரமணியம்.

திருவாரூர் அருகே உள்ள வேளுக்குடியில் 1920-ல் பிறந்த கு.மா.பா, நான்கு வயதிலேயே தந்தையை இழந்தவர். தாய் பாடிய தேவார, திருவாசக பக்தி பனுவல்களைக் கேட்டுத் தமக்குள் தமிழ் செழித்ததாக அவரே ஒரு நேர்காணலில் கூறியிருக்கிறார்.

கு.மா.பா.வின் அடையாளம் நல்ல தமிழ். வெகுஜனத்திடம் ஒரு படைப்பாளியாக அவர் பெற்ற வெற்றியைவிட, அவர் பாடல்கள் அந்தக் காலத்துத் திரைத் தமிழைச் செழுமைப்படுத்திய வெற்றி அதிகம்.

ஒவ்வொரு பாடலுக்கு ஊடாகவும் ஓர் அரூப வட்டமிருக்கிறது. பாடுகிறவர்களின் கற்பனையும் நாடக பாவனையும் அந்த வட்டத்தைச் சுற்றி இயங்கும். தொடங்கிய இடத்தை வந்து தொடுகிற அப் பாடலின் வட்டத்தை உணர்ந்து ரசிக்கிற ஒருவர், குறிப்பிட்ட பாடலுக்குத் தீவிர ரசிகராகிவிடுவார். எழுத்து முறையிலும், பாடுகிறவர்களின் குரல் குழைவிலும், இசையமைப்பாளரின் வாத்திய ஒழுங்கிலும் இவ்வட்டம் கட்டமைக்கப் படுகிறது. உதாரணமாக, 'சிங்காரவேலனே தேவா' பாடலை எடுத்துக்கொண்டால் காருக்குறிச்சி அருணாசலத்தின் நாயனம் ஒருபுறமென்றால், எஸ்.ஜானகியின் குரல் இயைபு இன்னொருபுறம் பாடலை மெருகேற்றியிருக்கும். இந்தப் பாடலை இயற்றியதும் கு.மா.பா.தான்!

ஆறு கட்டை, ஏழு கட்டை என உச்ச ஸ்ருதியில் மிகச் சரளமாகப் பாடுகிறவர்களை 'ஸோப்ரானோ' என்றழைப்பார்கள். வடக்கில் லதா மங்கேஷ்கரும், தெற்கில் எஸ்.ஜானகியும் அப்படியான குரலுடையவர்கள். மேற்கத்திய இசையுடன் அதிகம் புழங்குகிறவர்களுக்கு இது தெரியும். பாடும்போது இடறிவிடாத, காதுக்கு இனிமையூட்டக்கூடிய வரிகள் இல்லாவிட்டால் அப்பாடலின் ஆயுள் விருத்தி கொள்ளாது.

கு.மா.பா.வின் பாடல்கள் அனைத்திலும் கடலைக் கடைய திரண்டுவரும் அமுதத்தைப்போல, குரல் கனிய உருண்டு வரும் வார்த்தைகள் கொட்டிக் கிடக்கும். திரைப் பாடலைக்கூட மரபாக எழுத வேண்டும் என விரும்பியவர். மரபாக என்றால், யாப்பாக, செழுந்தமிழின் சிறப்புகளைக் கையாளும் விதமாகத் தமது பாடல்களை அமைக்க பிரியப்பட்டிருக்கிறார்.

நேற்றைய காற்று

# அமுதைப் பொழியும்

'பூவில் இடங்கொள்ள
போதாமல் என்னுடைய
நாவில் இடங்கொண்ட
நாயகியே - நோவில்
முடகுற்ற தாயிவளும்
முன்போல் எழுந்து
நடக்கத் தருவாய் நலம்'

- 'மகாகவி காளிதாஸ்' படத்தில் 'சின்னையா என்றழைத்த' பாடலை நேரிசை வெண்பாவில் எழுதியிருக்கும் பாங்கே அவரது தமிழ்க் காதலை நமக்கு உணர்த்தும்.

'அழகிய அசுரா', 'அழகான ராட்சசியே', 'காதல் பிசாசே' மாதிரியான சொல்லாட்சிகளுக்கு முன்னோடி இவருடைய 'யாரடி நீ மோகினி' பாடல் தான்!

அவருடைய பாடல்களை சீர் பிரித்து வாய்ப்பாடு எழுதினால் மிகச் சரியான வெண்டளைக்குள் இவருடைய பாடல் அமைப்பு வந்து விடும்.

'இன்பம் பொங்கும்
வெண்ணிலா வீசுதே
என்னைக் கண்டு
மௌன மொழி பேசுதே'

என்ற 'வீரபாண்டிய கட்டபொம்மன்' திரைப் படத்தில் அனைத்துப் பாடல்களும் கு.மா.பா.வால் புனையப் பட்டவை. அடுக்கு மல்லியை, காம்பை ஆய்ந்து கோத்தாற் போல ஒவ்வொரு பாடலும் தனித்துவம் நிரம்பியவை. ஒரு திரைப்பாடலாசிரியன் எந்த நோக்குக்காக கொள்கைகளை வரித்துக் கொள்கிறானோ, அந்தக் கொள்கைகளுக்காக வாழ்நாள் முழுவதும் போராடி மடிய வேண்டும். இல்லையேல், அவன் போராட்டம் மட்டுமன்று, கொள்கைகளும் கால நீரோட்டத்தில் கரையொதுங்கும் சருகாக விரயமாகிவிடும். விரும்பியதை பின்வரும் தலைமுறைக்கு இட்டுச் செல்லும் தந்தை ஸ்தானத்தில் தன்னை நிரூபிக்க முயன்றிருக்கிறார் கு.மா.பா.

'அறியாத மாந்தர்களே
சாவைக் கண்டு
அஞ்சிடுவார்! அழுதிடுவார்!
ஆத்மிகத்தின்
கரைகாணும் ஞானியரோ
உயிருக்கென்றும்
அழிவில்லை
என்றெண்ணி
சிரிப்பதுண்டு'

என 'மகாகவி



# நிலவே...

காளிதாஸ்' பாடலை எழுதியவர், பின்வரும் வரிகளில் ஒன்றைப் பொறித்து வைப்பார். 'முறையான பெரும் பணியால் சாதனைகள், முடிப்பரோ புகழுடலாய் நிலைப்பதுண்டு' என்று எழுதி, தம் உள்ளக்கிடக்கையைச் சூசகமாக அல்லாமல் நேரடியாகவே முழங்கியிருக்கிறார்.



* கு.மா.பா.

சுயமரியாதை இயக்கம், தமிழரசுக் கழகம், காங்கிரஸ் ஆகியவற்றோடு தொடர்பு கொண்டிருந்த கு.மா.பா., தமிழரசுக் கழகத்தின் பொதுச் செயலாளராகவும் 1974 – 80 வரை சட்டசபை மேலவை உறுப்பினராகவும் இருந்திருக்கிறார். சிலம்புச் செல்வர் ம.பொ.சி.யின் தமிழரசுக் கழகத்தில் தம்மை இணைத்துக் கொண்டு, அரசியல் களத்திலும் தம் பணியைத் தொடர்ந்திருக்கிறார். 'மணிக்கொடி சிற்றிதழ்' தமிழ் இலக்கிய வரலாற்றுக்குச் செய்திருக்கிற அரும்பணி ஒப்பிடப்பட முடியாதது. வெள்ளை ஏகாதிபத்தியத்தின் வீழ்ச்சிக்காகப் பாடுபட்டது; நம் கைகள் சில பெயர்களை, உருவங்களை– கேட்டு, கண்டு, வணங்கத் தொடங்கும் படைப்பாளிகள் பலரை உருவாக்கியது. ல.ரா., டி.எஸ்.சொக்கலிங்கம், புதுமைப்பித்தன், பி.எஸ். ராமையா, ஸ்டாலின் சீனிவாசன் போன்ற முக்கிய கர்த்தாக்கள் முளைவிட்ட பத்திரிகை மணிக்கொடி. அந்தப் பத்திரிகையே தன்னை மேலும் மேலும் தமிழுணர்வு கொள்ளச் செய்தது என்ற கூற்றே கு.மா.பா.வின் சிந்தனைக் குன்றுக்குச் சான்று.



"கட்சியை விட்டு அவரை ஏன் தூக்கிட்டாங்க?"

"தொண்டர்களை ஊக்கப்படுத்த பூஸ்ட், ஹார்லிக்ஸ் வாங்கின செலவுனு கணக்கு காட்டினாராம்!"

– எம்.அசோக்ராஜா

'அம்பிகாபதி' என்றொரு திரைப்படம். பாடலும் வசனமும் பாவேந்தர் பாரதிதாசன். அவருடைய பாடலிலும் குறை கண்டு திருத்துவதற்கு கு.மா.பா.வை அழைத்தது, அந்தத் திரைப்படத் தயாரிப்புக்குழு.

தான் மதிக்கும் ஒருவருக்கு நாம் செய்யும் கைம்மாறு அவர் புகழைக் கூட்டுவதன்றி குலைப்பதில்லை. 'பாவேந்தர் பாடலைத் தொட்டு வணங்கவே தனக்குத் தகுதியிருக்கிறது; அடித்துத் திருத்தும் துணிவில்லை. அப்படிச் சம்பாதிப்பதைவிட, பட்டினியாகச் சாவதுமேல்' என்று கூறித் திரும்பியிருக்கிறார். துணிவில்லை என்று சொன்னது மனத்துணிவு அன்று. திருத்தக் கொடுக்காவிட்டாலும் குற்றக் கற்களை வீசி, அப்பாடல் பழம் தனக்குக் கிடைக்குமா என ஏங்கிக்கிடக்கும் குணத்தார் அல்லர், இவர்.

இன்றுவரை அவருடைய மிகப் பிரபலமான பாடல்களில் ஒன்றான 'சித்திரம் பேசுதடி' பாடலைக் கேட்டுச் சிந்தை மயங்காதவர் இருப்பாரா?

'சித்திரம் பேசுதடி' பாடலில்,

'தாவும் கொடி போலே – ஒளித்<br>
தங்கக் குடம் போலே<br>
பாவையுந்தன் பேரெழிலே<br>
ஆவலைத் தூண்டுதடி'

– என்று வரும். 'தங்கக் குடம்' என்பதை ஒளித் தங்கும் குடம் போலே எனப் பிழையாகப் பாடியும் ரசித்திருக்கிறேன். அவர் மீது எனக்கேற்பட்ட ஈர்ப்புக்கு எத்தனையோ காரணங்களுண்டு. யாவற்றையும் விட, துள்ளலிசைப் பாடலிலும் அவர் கையாளும் கவித்துவம் இருக்கிறதே,

அதுதான் முதன்மையானது. ஆடலாலும் தமது அழகு ததும்பும் சேட்டையாலும் நம்மை வெகுவாகக் கவர்பவர் சந்திரபாபு. தானே பாடி ஒரு பாடலை மக்கள் மத்தியில் எப்படிச் சேர்க்க வேண்டும் என்பதற்கு அவரே நல்ல உதாரணம். அவருக்காக 'மரகதம்' திரைப்படத்தில்,

'குங்குமப் பூவே
கொஞ்சும் புறாவே
தங்கமே உன்னை
கண்டதும் இன்பம்
பொங்குது தன்னாலே'

– என்றொரு பாடல். நீர், நிலம், காற்று, ஆகாயம், நெருப்பு இவற்றோடு காதலை ஒப்பிட்டு உருகிற அவர்களுடைய பேனாவிலிருந்து வழிவது மையன்று; பிரியம். கலாசாரத்தை, பண்பாட்டை, ஒழுங்கை மீறாத மனமும் காதல் வசப்பட்டால் மதுவைக் கூட அனுமதிக்கும் மகிமையை உருக்கிறது. 'அன்பே என் ஆரமுதே வாராய்' பாடலில்

'வெண்ணிலவுக் கிண்ணியிலே
என்னிதயக் காதலையே
உண்ணும் மதுவாய்
நிறைத்துத் தருவேனே'

– எனப் பெண் பாட, வெண்ணிலவுக் கிண்ணி என்ற பிரயோகம் புதிதும் புத்துணர்வும் தரும் கு.மா.பா.வின் எழுத்துக்கு மகுடம். அதே பாடலில்,

'விண்ணின் மழைத்தாரைகளை
வீணை நரம்பாக்கி அதில்
இன்னொலியை மீட்டி
இசை பொழிவேனே'

– என்கிறார். மழைத் தாரைகள் வீணையை மீட்டினால் வரும் இசை எப்படியிருக்கும் என்று யோசிப்பதே அமுதக் கலசத்தை அப்படியே கவிழ்த்துக் குடிப்பது போல ஆகிறது.

நதியில் நீந்துகின்ற மீன்கள் எதற்கு நீந்துகின்றன? இரைதேடவோ நீந்துவது தன் இயல்பு என்பதாலோ அல்ல. வீசிய வலையில் இருந்து தப்பிக்கவோ வேறோர் இடத்துக்கு இடம்பெயர்ந்து செல்லவோ அல்ல. பிறகெதற்கு? கு.மா.பா. அதற்குப் பதில் எழுதியிருக்கிறார். 'மாசிலா நிலவே' எனும் பாடலில்,

'தேன் துளிகளை
ஏந்தும் மலரும்தென்றலும்
உறவாடுதே - உந்தன்
மீன் விழிகளைக்
காணும் நதியின் மீன்களும்

# தாமரை



**கோ**யமுத்தூர் பொண்ணு இவங்க. அரசினர் தொழில் நுட்பக் கல்லூரியில் பி.இ. (இயந்திரவியல்) படித்தவர். 1991-ல் சீமானின் 'இனியவளே' படத்தில் முதன்முதலில் பாடல் எழுதினார். 'மின்னலே'வின் 'வசீகரா' பாடல் மூலம் எல்லாரையும் வசீகரப்படுத்திய கவிஞர் தாமரை, 2001ஆம் ஆண்டு தமிழக அரசின் விருதைப் பெற்றுள்ளார். ஆங்கில கலப்பில்லாமல் மென்மையாக எழுதுவது இவர் சிறப்பு. ஆங்கில கலப்பில்லாமலேயே பேசவும் செய்கிறார். இரண்டு சிறுகதைத் தொகுப்புகளையும் ஒரு கவிதைத் தொகுப்பையும் வெளியிட்டுள்ளார். இலக்கிய விருதுகள் பதினொன்றுக்கும் மேல் பெற்றுள்ளார். இப்போது பதினைந்து படங்களுக்கு பாட்டெழுதிக் கொண்டிருக்கிறார்.

**- நிலவெழில்**

துள்ளியாடுதே'

– தன் உறவுக்காரர்களைக் கண்டு மகிழ்ச்சியடைகிற பெண் போல (பிறந்த வீட்டுக்காரர்கள்) உன் கண்ணிலுள்ள மீன்களைக் கண்டு நதி மீன்கள் நீந்துகின்றன என்கிறார். கு.மா.பா.வை நினைக்குந்தோறும் தன்போல இவரென்று மகிழும் வாய்ப்பு இளந்தலைமுறைப் பாடலாசிரியர்களுக்கும் நேரும். அவரைப் போலச் செப்பமாக, அவரைப் போல நுட்பமாக எழுதுகிற பாடலாசிரியர்களுக்கு எனத் திருத்திக் கொள்க. அளவுக்கு மிஞ்சினாலும் கு.மா.பா.வின் அமுதப் பாடல்கள் கசப்பதில்லை; சலிப்பதுமில்லை.

**(வீசும்)**

படம் : **ஸ்ரீஹரி**

# கொலையும் செய்வாள்



கண்ணாடி கதவுகள்

**இதுவரை:**

**ரா**தாவின் மனநிலை என்னவென்று தெளிவாக அறிந்துகொள்ள விரும்புகிறான் ஷ்யாம். "நான்தான் வேணும் என்று பாமா அடம் பிடித்தால் என்ன செய்வாய்?" என்று ராதாவிடம் கேட்கின்றான். ''உங்களை யாருக்காகவும் நான் விட்டுத் தர மாட்டேன்'' என்று ராதா சொல்ல, அதிர்ச்சியடைகிறான் ஷ்யாம்.

அஸ்வினியின் வீட்டில் நுழையும் ரௌடிகள், "ஒழுங்காக ஊர் போய்ச் சேர். திரும்பவும் இந்த ஊருக்கு வராதே" என்று மிரட்டி அவளைத் துரத்துகின்றனர்.

பூங்கொடி அதைப் பார்த்து அதிர்ச்சியடைகிறாள்.

ஆனந்த் தரும் பூ, புடைவையை ஏற்றுக் கொள்ளும் யாமினி. விஷயத்தை வனஜாவிடம் சொல்கிறாள் பூங்கொடி. "இங்க நடக்கறது எதுவுமே எனக்குப் பிடிக்கலை. நான் கிளம்பறேன்'' என்கிறாள். ''ஆனந்த் வாங்கிக் கொடுத்ததும் தப்பில்லை, யாமினி அதைக் கட்டிக்கிட்டதும் தப்பில்லை" என்கிறாள் வனஜா. பூங்கொடி திகைக்கிறாள்.

அஸ்வினி காலி செய்ததும் அருணைச் சந்தித்து நன்றி தெரிவிப்பதோடு மேலும் பணம் தருகிறாள் சீதா. "இந்தத் தொழிலை இதோடு மறந்துடுங்க" என்று சீதா கூற அதை அலட்சியப்படுத்துகிறான் அருண்.

பாமாவுக்கு ஏற்ற மாப்பிள்ளையாக கௌரிசங்கரைத் தேர்ந்தெடுக்கிறாள் ராதா. பெண் பார்க்கும் படலமும் நடக்கிறது. ஷ்யாமும், ஆனந்தாயியும் உச்சபட்ச டென்ஷனோடு அதில் கலந்து கொள்கிறார்கள். கௌரிசங்கருக்கு பாமாவைப் பிடித்துவிடுகிறது.

கௌரிசங்கருக்குத் திடீரென்று மர்மபோன் வருகிறது. பாமாவுக்கும் ஷ்யாமுக்கும் ரகசிய உறவு இருப்பதாக ஷ்யாமே குரலை மாற்றிப் பேசுகிறான்.

"எங்க வேலை செய்தீங்க?" என்ற கேள்வி அருணைத் துரத்துகிறது. தான் பிசினஸ் செய்யப்போவதாக அருண் சொல்லிக் கொள்கிறான்.

தனக்கு வந்த மர்மபோன்கால் பற்றி பாமாவிடம் சொல்கிறான். "இந்த வதந்தி எங்க வீடு வரைக்கும் போறதுக்கு முன்னாடியே நிச்சயதார்த்தத்தை நடத்திவிடலாம்" என்கிறான். ஷ்யாம் தனது ப்ளான் இப்படி ரிவர்ஸாக ஒர்க்அவுட்டானதை எண்ணிக் கலங்குகிறான்.

ஷ்யாம்தான் இப்படிச் செய்திருப்பான் என்று உணர்ந்துகொள்ளும் பாமா, அவனை எச்சரிக்கிறாள். ஆனந்தாயியின் முயற்சிகளையும் மீறி நிச்சயார்த்தம் நடந்து விடுகிறது.

**இனி...**

**பா**மா, கௌரி சங்கர் நிச்சயதார்த்தம் நல்லபடியாக நடந்து முடிந்ததை ஆனந்தாயியால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. நேராக பாமாவிடமே போய் நியாயம் கேட்கிறாள்.

"என்னையும், என் புள்ளையையும் ஏமாத்திட்டியே'' என்று புலம்புகிறாள். ''இப்பவும் ஒண்ணும் பிரச்னை இல்லை. ராதாவை டைவர்ஸ் பண்ணிட்டு வந்தா கல்யாண மேடையிலே இருந்தாலும், நான் ஷ்யாமுடன் வரத் தயார்'' என்கிறாள் பாமா.

பாமாவின் பதிலில் சந்தோஷப்படும் ஆனந்தாயி, ஷ்யாமிடமும் இது குறித்துப் பேசுகிறாள். "பாமா எனக்காகக் காத்திருக்காமல் அவசரப்பட்டுவிட்டாள்'' என்கிறான் ஷ்யாம். "உங்க கல்யாணம் நடக்கிறதுக்காக, நான் ராதாவைக் கொல்லவும் தயார்'' என்று ஆனந்தாயி சொல்ல, ஷ்யாம் அதிர்கிறான்.

வெளிநாட்டுக்குச் சென்றிருக்கும் சந்திரசேகரனின் வருகைக்காக ஆவலோடு காத்திருக்கிறார்கள். கீதாவும், கார்த்திக்கும். அஸ்வினி தமது கனவில் வந்ததாக கார்த்திக் சொல்ல, கீதா அதிர்கிறாள். "அவளை மறந்துவிடு" என்கிறாள். அந்த நேரத்தில் சந்திரசேகரனின் கார் வரும் சப்தம் கேட்கிறது. இருவரும் ஆவலோடு சந்திரசேகரை வரவேற்கிறார்கள். சந்திரசேகரோடு அஸ்வினியும் காரிலிருந்து இறங்க, மிகுந்த அதிர்ச்சிக்குள்ளாகிறாள் கீதா.

# ஆனந்தாயி!

"அஸ்வினியை ஏன் அழைத்து வந்தீர்கள்?" என்று சண்டை போடுகிறாள். "அஸ்வினியை ஆளை வைத்து விரட்டியது பாவம்" என்று கீதாவின் மேல் கோபப்படுகிறார் சந்திரசேகரர். கோபத்தின் உச்சத்தில் அவளை அறைந்தும் விடுகிறார். ''அஸ்வினி இனி இங்கதான் இருப்பா'' என்று தீர்மானமாகச் சொல்லி விடுகிறார்.

கீதா கோபமாகச் சென்று அருணிடம் சண்டை போட்டு, கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்க, கார்த்திக்கிடம் பெற்ற தாய் இல்லையென்ற விவரத்தைக் கூறி விடுவேன் என்று அருண் மிரட்டுகிறான். அருணின் மகன் இதைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

பாமாவுக்காக முகூர்த்த புடைவையைத் தேர்ந்தெடுக்கிறாள் ராதா. அதனைப் பூஜையறையில் பத்திரமாக வைக்கிறாள். ஆனந்தாயி அதைப் பார்த்துக் கிண்டல் செய்கிறாள். தனது எண்ணத்துக்குத் தடையாக இருக்கும் பூங்கொடியை வீட்டைவிட்டுத் துரத்த முடிவு செய்கிறாள் யாமினி.

ஆனந்தைத் திருமணம் செய்துகொண்டு இந்த வீட்டு மருமகளாக இருக்க முடியும் என்று தவறான ஐடியாவை பூங்கொடிக்குத் தருகிறாள் யாமினி. அது குறித்து பூங்கொடி ஆனந்திடம் பேசுகிறாள்.

ஆனந்த் அதற்குச் சம்மதித்தானா?

அஸ்வினியை கீதா வீட்டைவிட்டு வெளியேற்றினாளா? பாமாவினால் தொடர்ந்து அவமானத்துக்குள்ளாகிறான் ஷ்யாம். அந்த அவமானத்தின் விளைவாக அவன் எடுக்கும் முடிவென்ன?

பதில்கள் வரும் வார எபிஸோடுகளில்...

**'கண்ணாடி கதவுகள்' தொடரை விஜய் டீ.வி.யில் பார்த்துவிட்டுத் தகுந்த விமர்சனங்களை எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அதிர்ஷ்டசாலி நேயருக்குத் தங்க நாணயம் பரிசாகக் காத்திருக்கிறது! கல்கியில் வெளியாகும் கூப்பனை விமர்சனக் கடிதத்துடன் இணைத்து அனுப்புங்கள்.**



கண்ணாடி கதவுகள்,
விஜய் டீ.வி,
அஞ்சல் பெட்டி
எண் : 8484,
சென்னை - 600 034

## பிரியன்



ரசிகமணி டி.கே.சி.யின் ரசிகர் மரபின் மைந்தன் முத்தையா, டி.கே.சி. ரசித்த இலக்கியம், கடிதங்கள் மற்றும் அவரது வாழ்க்கைக் குறிப்புகள் ஆகியவற்றை முதன்மைப்படுத்தி 'ரசனை' என்னும் சிற்றிதழ் ஒன்றை நடத்தி வருகிறார். இந்தச் சிற்றிதழைச் சிறந்த சிறு பத்திரிகையாகத் தேர்ந்தெடுத்து 5000 ரூபாய் பரிசுத் தொகையும், நினைவுப் பரிசும் கொடுத்திருக்கிறார் பிரபல எழுத்தாளரும், ரசிகமணியின் அன்புக்குப் பாத்திரமாக இருந்தவருமான கி.ராஜநாராயணன். அவர் ஏன் பரிசு கொடுக்க வேண்டும்?



# கி.ரா.வின் மறுபக்கம்!

செப்டெம்பர் 16-ஆம் நாள் தான் கி.ரா. பிறந்த நாள். அன்று அவரது அன்பர்கள் அழைக்காமலேயே பாண்டிச்சேரியிலுள்ள அவர் வீட்டில் கூடினார்கள். அவர் வசிக்கும் அரசு குடியிருப்பின் மாடியில் சின்டெக்ஸ் தண்ணீர்த் தொட்டிகளின் நடுவில், மாமரக் கிளைகள் ஷாமியானாவாக இருக்க, அந்தச் சிறு நிகழ்ச்சி நடந்தது. வரவேற்றுப் பேசிய பேராசிரியர் பஞ்சாட்சரம், "தான் வைத்திருக்கும் கரிசல் அறக்கட்டளையின் சார்பில் இதுவரை பதினொரு சிறு பத்திரிகைகளுக்குப் பரிசு வழங்கி கௌரவித்திருக்கிறார் கி.ரா. அவரது எழுத்தைப் பயன்படுத்திக் கொண்ட திரைப்படத் தயாரிப்பாளர்கள் கொடுத்த பணத்தை வங்கியில் போட்டு, அந்த வட்டியிலிருந்து பரிசு கொடுத்து வருகிறார் கி.ரா." என்றார்.

"இப்படிச் சிறு பத்திரிகைகளை ஊக்கப்படுத்துவது பாராட்டத்தக்கது. சிறு பத்திரிகைகளுக்கு தொடர்ச்சி முக்கியம். அவை தங்கள் வாசகர்களை அடையாளம் கண்டு கொண்டு, மார்க்கெட் செய்ய வேண்டும்" என்று சொன்னார் முத்தையா.

விழாவில் கலந்து கொண்ட நாஞ்சில் நாடன், "கி.ரா.வுடன் என் அனுபவங்களை முழுவதுமாக வெளிக்கொண்டு வரும் வகையில் எழுதப் போகிறேன்" என்றார். நாஞ்சிலுக்கு சாகித்ய அகாதமி விருது கிடைக்கவில்லையே என்று பலர் வருத்தப்பட்டுக் கொண்டார்கள். பரிசு கொடுத்துப் பேசிய கி.ரா., "என் வாழ்க்கையில் எதிர்பாராதது மட்டுமே நடந்து வருகிறது. சங்கீத வித்வானாக வேண்டுமென்பதே என் ஆசை. ஆனால் பேனா பிடிக்க வேண்டியதாகிவிட்டது. என் எழுத்து மற்றவர்களுக்கு சந்தோஷத்தைக் கொடுத்தாலும், எனக்கு எழுதுவது என்பது மிகச் சிரமமான ஒன்று" என்றார்.

- ஸ்ரீநி

# படித்தவன் சிந்திக்கிறான்; சிந்தித்தவன் முன்னேறுகிறான்

**சாகசம், வீரம், காதல், சோகம், பரபரப்பு, திகில், மகிழ்ச்சி, அற்புதம்**

## கோட்டயம் புஷ்பநாத்

தமிழில் **சிவன்**

| | | |
|---|---|---|
| 1. | தேவ மோகினி | – 54.00 |
| 2. | அர்த்த ஜாம மோகினி | – 67.00 |
| 3. | மந்திரமோகினி | – 60.00 |
| 4. | பேய் பங்களா | – 91.00 |
| 5. | மோகினியின் காதல் | – 80.00 |
| 6. | பதிலுக்கு பதில் | – 60.00 |
| 7. | மரைன் டிரைவ் | – 60.00 |
| 8. | காதல் மந்திரம் | – 80.00 |
| 9. | மந்திர முழக்கம் | – 55.00 |
| 10. | மர்ம மாளிகை | – 40.00 |
| 11. | மோகினி கோயில் | – 50.00 |
| 12. | மோகினி சிலை | – 35.00 |
| 13. | கடத்தல் காற்று | – 60.00 |
| 14. | மோகினி சபதம் | – 85.00 |
| 15. | மாயக் கனவுகள் | – 60.00 |
| 16. | அரண்மனை தேவதை | – 85.00 |
| 17. | சௌபர்ணிகா | – 65.00 |
| 18. | தம்புரான் குன்று | – 45.00 |

## வி.ஸ. காண்டேகர்

தமிழில் **கா.ஸ்ரீ.ஸ்ரீ**

| | | |
|---|---|---|
| 1. | எரி நட்சத்திரம் | – 66.00 |
| 2. | கண்ணீர் | – 80.00 |
| 3. | மனோரஞ்சிதம் | – 85.00 |
| 4. | காண்டேகர் கதைகள் I | – 50.00 |
| 5. | காண்டேகர் கதைகள் II | – 50.00 |
| 6. | காண்டேகர் கதைகள் IV | – 50.00 |
| 7. | கூண்டுக்கு வெளியே | – 25.00 |
| 8. | அரும்பு | – 25.00 |

## ரா.கி. ரங்கராஜன்

| | | |
|---|---|---|
| 1. | தர்மங்கள் சிரிக்கின்றன | – 45.00 |
| 2. | ஹோமா! ஹோமா! ஹோமா! | – 60.00 |
| 3. | அழைப்பிதழ் | – 65.00 |
| 4. | ராசி | – 65.00 |
| 5. | க்ரைம் | – 55.00 |
| 6. | கையில்லாத பொம்மை | – 60.00 |
| 7. | உள்ளேன் அம்மா | – 40.00 |
| 8. | அபாய நோயாளி | – 60.00 |
| 9. | ஒளிவதற்கு இடமில்லை (2 பாகங்கள்) | – 140.00 |
| 10. | ஹவுஸ்ஃபுல் | – 72.00 |
| 11. | புரட்சித் துறவி | – 35.00 |
| 12. | ஒரு தற்கொலை நடக்கப் போகிறது | – 40.00 |

### சுதாங்கன்

| | | |
|---|---|---|
| 1. | தேதியில்லாத டைரி | 36.00 |
| 2. | சாய்ந்து கொள்ள தோள் வேண்டும் | 35.00 |

**தேவதாஸ் – ரூ. 55.00**
சரத் சந்திர சாட்டர்ஜி

## உலக இலக்கிய வரிசை

தமிழில் **சிவன்**

| | | |
|---|---|---|
| 1. | ராபின் ஹூட் – மேத்யூ லூக் | – 45.00 |
| 2. | காரமசோவ் சகோதரர்கள் – தஸ்தயெவ்ஸ்கி | – 35.00 |
| 3. | ராபின்சன் குடும்பம் – யோஹன் டேவிட் வைஸ் | – 32.00 |
| 4. | இலியட் – ஹோமர் | – 45.00 |
| 5. | ஒடிசி – ஹோமர் | – 30.00 |
| 6. | பிரபு மாண்டி கிறிஸ்டோ – அலெக்ஸாண்டர் டூமாஸ் | – 37.00 |
| 7. | டாம்சாயர் – மார்க் ட்வைன் | – 37.00 |
| 8. | அதிசய உலகில் ஆலிஸ் – கரோல் லூயிஸ் | – 37.00 |
| 9. | ராபின்ஸன் குரூசோ – டேனியல் டீஃபோ | – 48.00 |
| 10. | மோபிடிக் – ஹெர்மன் மெல்வில் | – 45.00 |
| 11. | கலிவரின் பயணங்கள் – ஜோனாதன் ஸ்விஃப்ட் | – 40.00 |
| 12. | அன்னகரீனா – லியோ டால்ஸ்டாய் | – 35.00 |
| 13. | போரும் அமைதியும் – லியோ டால்ஸ்டாய் | – 32.00 |
| 14. | புதையல் தீவு – ஆர். எல். ஸ்டீவென்சன் | – 42.00 |
| 15. | இழந்த உலகம் – சர். ஆர்த்தர் கானன்டாயல் | – 32.00 |
| 16. | ஃப்ராங்கென்ஸ்டைன் – மேரி ஷெல்லி | – 40.00 |
| 17. | ஹெய்டி – ஜோஹன்னா ஸ்பைரி | – 30.00 |
| 18. | காஸ்டர் பிரிட்ஜ் நகர மேயர் – தாமஸ் ஹார்டி | – 52.00 |
| 19. | ஆழ்கடலுக்கு அடியில் – ஜூலேஸ் வெர்னே | – 45.00 |
| 20. | டிராகுலா – ஸ்ட்ராம்புரோக்கர் | – |
| 21. | ஓஸ் நகரின் மாயாவி – எல். ஃப்ராங்பாம் | – 42.00 |
| 22. | உயிர்களின் மூலம் – சார்லஸ் டார்வின் | – 46.00 |
| 23. | டாம் மாமாவின் அறை – சார்லஸ் டார்வின் | – 42.00 |

**இது ராஜபாட்டை அல்ல**
நடிகர் சிவகுமார்
**ரூ. 165.00**

## வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார்

| | | |
|---|---|---|
| 1. | பூர்ணசந்திரோதயம் – 5 பாகங்கள் | – 650.00 |
| 2. | கும்பகோணம் வக்கீல் – 2 பாகங்கள் | – 200.00 |
| 3. | மாயா விநோதப் பரதேசி – 3 பாகங்கள் | – 365.00 |
| 4. | மேனகா – 2 பாகங்கள் | – 250.00 |
| 5. | மதன கல்யாணி – 3 பாகங்கள் | – 355.00 |
| 6. | சௌந்திர கோகிலம் – 4 பாகங்கள் | – 355.00 |
| 7. | வசந்த மல்லிகா | – 110.00 |
| 8. | வித்யா சாகரம் | – 100.00 |
| 9. | பன்னியூர் படாடோப சர்மா | – 150.00 |
| 10. | திவான் லொடபடசிங் பகதூர் | – 40.00 |
| 11. | திரிபுரசுந்தரி (அ) திகம்பரசாமியார் திடும்பிரவேசம் | – 130.00 |
| 12. | வஸந்த கோகிலம் | – 90.00 |
| 13. | தங்கம்மாள் (அ) தீர புருஷனின் தியாக கம்பீரம் | – 75.00 |
| 14. | பாலாமணி – 2 பாகங்கள் | – 170.00 |



அல்லையன்ஸ்
(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
64, (ப. எண் : 244) ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால் பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை – 600 004. தொலைபேசி: 2464 1314
e-mail : srinivasan@alliancebook.com
visit us at : www.alliancebook.com

# ம. மனோ சௌந்தர்

முழுவதுமாக உடல்நலம் தேறி விட்ட பொதுப்பணித்துறை அமைச்சர் துரைமுருகன், சங்கடப்படுத்தும் கேள்விகளுக்கும் சமயோசிதமாக பதில் கூறுவதில் ஆரம்பித்து, எதிர் கட்சிகளை நக்கலடிப்பது வரை அவருடனான சந்திப்பில் பல சுவாரஸ்யங்கள். அதிலிருந்து சில பகுதிகள்...

**கலைஞரின் நூறு நாள் ஆட்சி எப்படியிருக்கிறது?**

"இந்தியா டுடே, பிஸினஸ் டுடே, எக்கனாமிக்ஸ் டைம் போன்ற பத்திரிகைகள் உள்பட எல்லோரும் பாராட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

வெளிநாட்டு, இந்திய முதலாளிகள்கூட தமிழ்நாட்டை நோக்கி வர ஆரம்பித்துவிட்டார்கள். ஒரே ஒருவர் மட்டும்தான் இந்த ஆட்சி சரியில்லை என்று ஒற்றைக் குரலில் அலறிக் கொண்டிருக்கிறார்; அவர்தான் முன்னாள் முதலமைச்சர் ஜெயலலிதா."

**தொடர்ந்து ஜெயலலிதா தி.மு.க.வை விமர்சிக்கிறாரே?**

"அவர் விமர்சிக்காவிட்டால்தான் ஆச்சர்யம். சொல்ல விரும்புவதை 'சட்ட சபையில் வந்து சொல்லலாம் அல்லவா? போன ஆட்சியில் கலைஞர் சட்ட சபைக்கு வர மாட்டேன்' என அறிவித்து விட்டு, பத்



அரசியல்

திரிகைகளுக்கு அறிக்கை கொடுத்தார். ஆனால் இந்தம்மா 'நான் வரவே மாட்டேன்; சட்டசபைக்கு ஓ.பன்னீர்செல்வம்தான் எதிர்கட்சித் தலைவர்' என்று சொல்லிவிட்டு இப்போது திடீரென்று சபைக்கு வரத் துவங்கி பன்னீரையே கீழே இறக்கி விட்டார்கள்!''

**ஒரு இடைவெளிக்குப் பிறகான சட்டசபை அனுபவம் எப்படி இருந்தது?**

''ஜெ. சபைக்கு வந்தாங்க. ரெண்டு மணி நேரம் பேசினாங்க. அநாகரிகமாக எதுவும் நடக்கவில்லை. அப்படி நடந்துகொண்டால் ஏதாவது குற்றம் சாட்டலாம். அந்தம்மா 'நான் பேசும்போது அமைச்சர்கள் குறுக்கிட்டார்கள்' என்றுதான் சொன்னார். அவர்கள் ஆட்சியில் இருக்கும்போது கூட குறுக்கிட்டுப் பேசுவது இருந்தது. நாங்களாவது கொஞ்சம் பேசினோம். அவங்க ஒரு மணி நேரம் பேசி அறிக்கை படிப்பாங்க.

தேவையில்லாம அறிக்கை விடுவது அவர்களுடைய பொலிட்டிக்கல் இமேஜைத்தான் பாதிக்குமே தவிர, எங்களுக்கு ஒன்றும் நட்டமில்லை.''

**கலைஞருக்கு அடுத்து ஸ்டாலினை முதலமைச்சராக்க திட்டம் போடுவதாகக் கூறப்படுகிறதே?**

''தி.மு.க. என்பது ஜனநாயகக் கட்சி. பொதுக்குழு, செயற்குழு கூடித்தான் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். பெரும்பான்மையான சட்டமன்ற உறுப்பினர்கள் யாரைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கிறார்களோ அவரே முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறவார்.

**முதல்வர் பதவிக்கு ஸ்டாலின் தகுதியானவர்தானா?**

''தகுதி என்பது திறமை, அனுபவத்தின் காரணமாக ஏற்படுவது. ஸ்டாலின் நீண்ட நெடுங்காலம் அரசியலில் இருந்திருக்கிறார். ஓர் அரசியல்வாதிக்கு அழகு தியாகம் புரிவது. அதிக முறை சிறைக்குச் சென்று தியாகம் செய்தவர் ஸ்டாலின். தமிழ்நாட்டு அரசியல்வாதி, நல்ல மேடைப் பேச்சாளனாக இருக்க வேண்டும். ஸ்டாலினின் பேச்சைக் கேட்க ஆயிரமாயிரம் பேர் திரண்டு வருகிறார்கள்.

நிர்வாகத் திறமை என்று பார்த்தால், மேயராக இருந்து சென்னை மாநகராட்சிக்கு நல்ல நிர்வாகத்தைக் கொடுத்திருக்கிறார். இப்போதுகூட தமிழ்நாடு முழுவதும் சென்று கட்சி வித்தியாசம் இல்லாமல் எம்.பி, எம்.எல்.ஏக்களைச் சந்தித்து, மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மூலம் ஒரு 'கான்ஃபரன்ஸ்' கூட்டம் நடத்தி, மக்களின் குறைபாடுகளை நிவர்த்தி செய்திருக்கிறார். அவருக்கு முதலமைச்சர் ஆகும் தகுதி உண்டு. அவரைத் தி.மு.க. எம்.எல்.ஏக்கள் தேர்ந்தெடுத்தால் யாருக்கும் எந்த ஆட்சேபணையும் இருக்கப் போவ

# அழுகுணி ஆட்டம் ஆடுகிறதா தி.மு.க.?

தில்லை!''

**விஜயகாந்த் அ.தி.மு.க.வை விமர்சிப்பதைவிட தி.மு.க.வை அதிகம் விமர்சிக்கிறாரே?**

''விஜயகாந்த் ஒரு சினிமா நடிகர்; என் நண்பர். அவ்வளவுதான் அவரைப் பற்றி எனக்குத் தெரியும். புதிதாக அரசியல் கட்சியை ஆரம்பித்தால் ஆளுங் கட்சியைதான் விமர்சிப்பார்கள். காரணம், அதைப் பிடிக்கத்தானே போராடுகிறார்கள். ஆனால், அ.தி.மு.க.வை விமர்சிக்காததுக்கு என்ன உள்நோக்கமோ?''



**துணை நகரப் பிரச்னையில் அ.தி.மு.க.வும், பா.ம.க.வும் ஒரே அலைவரிசையில் இருப்பதால் இரு கட்சிகளும் மெல்ல மெல்ல நெருங்கி விடுவார்கள் என்று கூறப் படுகிறதே?**

''எங்களோடு இருக்கிற காரணத்தினாலேயே எங்களுடைய தோழமைக் கட்சிகள் அவர்களுக்கென்று இருக்கும் கொள்கைகளையும், தொலைநோக்குப் பார்வையையும் தனித்தன்மைகளையும் விட்டுவிட வேண்டும் என்பது பொருளன்று. அவர்களுக்கென்று சில எண்ணங்கள் இருக்கலாம். அதை அவர்கள் தெரிவித்தார்கள். அதற்கு கலைஞர் விளக்கங்களைக் கொடுத்தார்.

பா.ம.க. சொன்ன பிறகுதான் ஜெயலலிதா இந்தப் பிரச்னையைக் கிளப்பினார். 'ஓஹோ... தி.மு.க. கூட்டணியிலேயே ஒருவர் மாற்றுக் கருத்தைச் சொல்கிறார். எரியும் வீட்டில் பிடுங்குகிறவரை லாபம் என்ற எண்ணத்தில் பிரச்னையைக் கிளப்பினாரே தவிர அவராக இந்தத் துணை நகர எதிர்ப்பைத் துவங்கவில்லை. ஆக, குட்டையைக் குழப்பி மீன் பிடிக்கப் பார்க்கிறார் ஜெயலலிதா, இதற்கெல்லாம் அசைந்து கொடுப்பவையல்ல எங்கள் தோழமைக் கட்சிகள்.''

**அ.தி.மு.க எம்.எல்.ஏக்களை தம் பக்கம் இழுத்து அழுகுணி ஆட்டம் ஆடுகிறதா தி.மு.க.... சண்முகம், நவநீத கிருஷ்ணன் என்று அ.தி.மு.க.வினரின் 'வெளிநடப்பு' தொடர்கிறதே?**

''இது ஒரு ஜனநாயக நாடு. சிந்திக்கத் தெரிந்தவர்கள் தங்களுடைய கருத்துகளையும் உண்மைகளையும் கூற உரிமை உண்டு. அ.தி.மு.க. எம்.எல்.ஏ. போஸும், சண்முகமும் தங்களது உள்ளக் குமுறல்களை வெளிப்படுத்தியிருக்கிறார்கள். மற்றபடி எந்தக் கட்சியினரையும் இழுக்க வேண்டிய அவசியம் தி.மு.க.வுக்கு இல்லை; அழுகுணி ஆட்டம் ஆடும் பழக்கமும் எங்களுக்கு இல்லை!''

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**







## **சௌ.சுபா - சிர.பத்மநாபன்**

அமரர் கல்கி அவர்கள் சகோதரர் புத்தமங்கலம் **R.ஜகதீச அய்யர்** பௌத்ரியும், புதுடெல்லி **ஸ்ரீ ஜே.பி.ராமன் - சௌ.பாலா** தம்பதியினரின் கனிஷ்ட குமாரியுமான சௌ.சுபாவுக்கும், புதுடெல்லி **ஸ்ரீ என்.பாலகிருஷ்ணன் - சௌ.விசாலாட்சி** தம்பதியினரின் த்விதிய குமாரன் சிர.பத்மநாபனுக்கும் 31.08.06 அன்று புதுடெல்லியில் வேத கோஷங்கள் முழங்க உற்றாரும், சுற்றத்தாரும் வாழ்த்து கூறி விமரிசையாக திருமணம் நடந்தது.

வாழ்க மணமக்கள்!

## ஆங்கரை பைரவி

மிதித்து மிதித்து
மேல் ஏறிச் சென்ற மனிதன்
புலம்புகிறான்
கால்கள் வலிக்குதென
அவனது மிதித்தலில்
ஏற்பட்ட வலியை
ஜீரணித்தபடி கிடக்கின்றன
மேலும்
மிதிபடுதலுக்காக
இன்றைக்கும்
பல படிக்கட்டுகள்

மலடிப் பட்டம்
தந்த வலியை
உறிஞ்சி எடுக்கிறது
குழந்தை
எனது காம்புகளின் வழியே

கொடியை அசைத்தவருக்கும்
நகரும் புகைவண்டிக்கும்
எங்கே புரியப் போகிறது
பெட்டிக்கு உள்ளேயும்
வெளியேயும்
கை அசைத்துப் பிரியும்
மனசுகளின் வலி.

விடுமுறை நாளில்
திரண்டு வந்து விடுகிறது
பக்கத்து நகரத்தில் வசிக்கும்
அண்ணன்களின் குடும்பம்.
அன்றைக்கும் அடுக்களையில்
அம்மாதான் புகைகிறாள்.
என்கிற வேதனை தரும்
வலியின் குமிழ்களை
உடையாமல் பாதுகாக்கிறேன் -
எல்லோரும் கூடி மகிழ்வதைக்
கண் கொள்ளாது ரசிக்கும்
அதே அம்மாவுக்காக.



**சுகந்தி ஜி பாரதி** 

சந்திப்பு

# "சன் டி.வி. சப்போர்ட் என்னைக்கும் உண்டு!"

சரத்குமார் அ.தி.மு.க.வில் சேர்ந்ததிலிருந்தே ராதிகா பரபரப்பான நபராகிவிட்டர். அவர் எதைச் செய்தாலும் அது கூர்ந்து கவனிக்கப்படுகிறது. கொஞ்ச நாட்களாக யாரிடமும் பேசாமல் அமைதி காத்து வந்தவர், நம்மிடம் பல விஷயங்களை மனம் விட்டுப் பேசினார்.

'சித்தி' சீரியல் பெரிய வெற்றியடையும்னு நான் எதிர்பார்க்கவேயில்ல. ஏன்னா நா பிளான் பண்ணி நடிகையா வரல. அதே மாதிரித்தான் பெரிய பிளான் போட்டு சீரியல் தயாரிப்பில இறங்கல. ஆனா 'சித்தி' என்னை உச்சத்துக்குக் கொண்டு போனது. அப்புறம் அண்ணாமலை, ருத்ரவீணை, சிவமயம், சின்னபாப்பா, பெரியபாப்பா. இப்போ செல்வி'யின் பயணம் தொடர்ந்துகிட்டு இருக்கு. டி.ஆர்.பி. ரேட்டிங்கில் எப்பவும் முதல் ரெண்டு இடங்களில் ரடானுக்கு இடமுண்டு என்று சந்தோஷத்தில் பொங்கியவரிடம்,

நடிக, நடிகையர்கள் எல்லாரும் சினிமாவில் சம்பாதித்து வேறு துறைகளில் முதலீடு செய்யும்போது... என்று ஆரம்பிக்கும் முன்பே பதில் சொல்கிறார்.

சினிமாவுல நடிகையா நான் சம்பாதித்த பணத்தை சினிமா சம்பந்தப்பட்ட துறையில இன்வெஸ்ட் பண்றதுதான் தர்மம்னு நெனச்சேன். இன்னொரு காரணம் என் பொண்ணு. அவங்க சின்னக் குழந்தையா இருந்தபோது என்னால அவுட்டோர் ஷூட்டிங் போறது பிரச்னையா இருந்துச்சு. இந்தத் துறையை விட்டு என்னால

எதன் பொருட்டும் விலக முடியல. அதனாலதான் 'ரடான்' ஆரம்பிச்சு சீரியல் தயாரிப்புல ஈடுபட்டேன்.

**ரடானின் வளர்ச்சிக்கு முக்கிய காரணமென்று எதைச் சொல்வீர்கள்?**

நிறுவனம் இன்னிக்கு நல்ல வளர்ச்சியை அடைஞ்சதுக்கு நான் மட்டுமே காரணம்னு சொன்னா அது தற்பெருமை. எங்க ரடான் குடும்ப ஊழியர்கள் ஒவ்வொருவரும் இதற்குக் காரணம். ஒரு கால கட்டத்துல பேங்குல லோன் வாங்கக்கூட சிரமப்பட்டோம். அப்பத்தான் உணர்ந்தேன், எதையும் மற்றவர் அங்கீகரிக்கும் அளவுக்கு அதனுடைய உயரத்தைக் கூட்ட வேணும்னு. அதன்பிறகு கார்பரேட் கம்பெனியாக எங்க நிறுவனம் மாறிச்சு.



**உங்கள் கணவர் சரத்குமார் கட்சி மாறியதால், 'ரடான்' நிறுவனம் பாதிக்கப்பட்டதா?**

கண்டிப்பாக இல்லை. சன் டீ.வி. ரடானுக்கு எப்பவும் ரொம்ப சப்போர்ட்டிவா இருக்கிறது. எங்களுக்குள்ள நல்ல 'பிஸினெஸ் ரிலேஷன்ஷிப்' இருக்கு. அது தொடர்ந்து இருக்கும். அப்படியொரு நல்ல உறவால்தான் இன்னைக்கு நான்கு மொழிகளில் 'தங்கவேட்டை' கேம்ஷோ நடத்திட்டு இருக்கோம்.

**நடிகை விஜயலட்சுமி விவகாரத்தில் ரடான் டீ.வி.யும் உங்கள் பெயரும் அடிபட்டனவே...**

அந்தச் சம்பவத்தோட ரடானுக்கோ எனக்கோ எந்தவித சம்பந்தமும் இல்லை. ஒரு நிறுவனம்னா இதுமாதிரி பிரச்னைகளைச் சந்திக்க வேண்டியது இயல்பு.

எங்களுக்குன்னு நிறைய ஒழுக்க விதிமுறைகளும், கன்ட்ரோல் சிஸ்டமும் இருப்பதனாலதான் ரடானுக்குன்னு ஒரு நல்ல பெயர் இருக்கு.

**உங்க தொழில் வெற்றிக்குக் காரணம்?**

எந்தத் தொழிலில் வெற்றி பெறணும்னாலும் அந்தத் தொழில் மேலே ஒரு காதல், ஈடுபாடு வேணும். தொழிலைச் சந்தோஷமா செய்யணும். அப்படி செஞ்சாலே வெற்றிங்கிறது தானா வரும்.

**நாளைய அரசியலில் இருப்பீர்களா?**

எனக்கு அரசியல் தெரியாது; அரசியலுக்கு வருகின்ற எண்ணமும் இல்லை.

**ரடானில் உங்க கணவரின் பங்கென்ன?**

இந்த வளர்ச்சிக்கு முக்கியக் காரணம்னா அவரோட வழிகாட்டுதல்! ஏன்னா அவரும் தயாரிப்பாளரா, டிஸ்ட்ரிபியூட்டரா இருந்ததால் நிறைய தொழில் நுணுக்கங்களை அறிந்தவர். அதை எனக்கும் அவ்வப்போது சொல்லித் தருகிறார்.

**அனிதா ராமச்சந்திரன்**

பில்லியர்ட்ஸ் விளையாட்டில் உலகப் புகழ் பெற்றவர் பெங்களூர் பங்கஜ் அத்வானி. அண்மையில் இவர் நம் ஜனாதிபதியிடமிருந்து 'ராஜீவ்காந்தி கேல் ரத்னா' விருது பெற்றார். நம் நாட்டின் மிக உயர்ந்த விளையாட்டு விருது இது. பதக்கம், சான்றிதழ், ஐந்து லட்ச ரூபாய் ஆகியவை இந்தப் பரிசில் அடங்கும். இதற்கு முன்பு இந்த விருதைப் பெற்றவர்கள் சச்சின் டெண்டுல்கர், லியாண்டர் பையஸ், விஸ்வநாதன் ஆனந்த்.

# தரையில் தூங்கும் முதல்வர்!

பெங்களூர் பேருந்துப் போக்குவரத்துத்துறை அண்மையில் ஒரு புது மக்கள் சேவையைத் துவக்கியிருக்கிறது. பெங்களூரின் கெம்பகவுடா பஸ் நிலையத்திலிருந்து தினமும் காலை 8.30 மணி முதல் இரவு 7.00 மணி வரை இரண்டு மணி நேரத்துக்கு ஒரு முறை மினி பஸ்கள் புறப்படுகின்றன. இந்த பஸ்கள் நகரின் பிரபல தனியார், அரசு ஆஸ்பத்திரிகளுக்கு மட்டுமே போகின்றன! இருபது மருத்துவமனைகளை இந்த பஸ்கள் இணைக்கின்றன.



• பங்கஜ் அத்வானி

கர்நாடக முதலமைச்சர் குமாரசுவாமி கிராமங்களில் ஓரிரு நாட்கள் தங்கி, அங்குள்ள மக்களின் குறைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்கிறார். அண்மையில் அவர் மைசூருக்கு அருகிலுள்ள 'சிக்க கன்யா' என்ற கிராமத்தில் ஒட்டு வீட்டில் தங்கி, தரையில் படுத்துத் தூங்கினார். காலை ஆறு மணிக்கே எழுந்து துணையில்லாமல் வீடு வீடாகச் சென்று மக்களைச் சந்தித்தார்.

ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்தவர் ஜோன் என்னும் 22 வயது வாலிபர். ஒரு கலாசாரப் பரிவர்த்தனைக் குழு மூலமாக பெங்களூர் வந்திருக்கிறார். முதலில் குடகு மாவட்டத்திலுள்ள பள்ளியொன்றில் ஆங்கிலம் போதித்தார். பிறகு பெங்களூரில் பிற்பட்ட வகுப்பினருக்காக நடத்தப்படும் ஒரு ஹாஸ்டலில் பணியாற்றினார். பெங்களூரைப் பற்றி இவர் என்ன சொல்கிறார்? "ஒரு செழுமையான கலாசாரம் கொண்ட ஒரு நாட்டுக்குப் போக வேண்டும் என்ற எண்ணத்தில் தான் நான் இந்தியாவுக்கு வந்தேன். ஆரம்பத்தில் பெங்களூரில் ஜன நெரிசல், தாறுமாறான போக்குவரத்தைக் கண்டு மிரண்டு விட்டேன்! பிறகு இந்த ஊரின் அன்பான மக்கள், இதமான கிளைமேட், தகவல் - தொழில் நுட்ப வளர்ச்சி இதெல்லாம் எனக்கு ரொம்பப் பிடித்துப் போய் விட்டது" என்று கூறும் ஜோன், ஒரு பி.பி.எம். மாணவர்.

• ஜோன்



காலம் ஃப்ரம் கர்நாடகா

**எஸ். சந்திரமௌலி** 

**ஒய்**.எஸ்.ராஜன்... ஜனாதிபதி அப்துல்கலாமுடன் உள்நாட்டு, அயல்நாட்டுப் பயணங்களின்போது உடன் செல்பவர். கலாம், கேரள மாநிலம் தும்பாவில் இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் பணியாற்றிக்கொண்டிருந்த நாளிலிருந்தே இருவரும் நண்பர்கள். கலாம் இந்தியப் பிரதமரின் தலைமை அறிவியல் ஆலோசகராக இருந்தபோது, அவரின் கீழ் மத்திய அரசின் செயலாளராக இவர் பணியாற்றினார். தற்போது






இந்தியத் தொழில் நிறுவனங்கள் சம்மேளனத்தின் ஆலோசகராக இருக்கும் ராஜன், அண்மையில் ஜனாதிபதி சென்னை வந்திருந்தபோது உடன் வந்திருந்தார். அவரை சந்தித்துப் பேசினோம்.

அறிவு

"நான் பிறந்தது பாளையங்கோட்டைக்கு அருகிலுள்ள கொட்டாரம் திருமலைக் கொழுந்துபுரம் என்ற மின் வசதியற்ற குக்கிராமத்தில். மும்பையில் அப்பாவுக்கு மத்திய அரசில் வேலை. எங்கள் சிறுவயதிலேயே அம்மா இறந்து விட்டதால், என்னையும் அக்காவையும் கிராமத்தில் இருந்த பெரியப்பாவிடம் அனுப்பி வைத்தார் அப்பா. இரண்டு ஆசிரியர்கள் கொண்ட கிராமத்துப் பள்ளியில் படித்தேன். அந்த இரண்டு ஆசிரியர்களும் என் கல்விக்குப் போட்ட பலமான அஸ்திவாரம் காரணமாக, அடுத்து பாளையங்கோட்டைக்குப் படிக்க வந்தபோது, ஒன்பது வயதில் ஏழாம் வகுப்பில் என்னைச் சேர்த்துக்கொண்டது அந்தப் பள்ளிக்கூடம். பிறகு, கல்லூரிப் படிப்பு மும்பையில். அங்கே எனக்கு பௌதிகம் போதித்தவர் பேராசிரியர் மது தண்டவதே. தொழிற்சங்க விஷயங்களில் அவர் ரொம்ப பிசி என்பதால் சில சமயங்களில், 'அடுத்த வாரம் எனக்கு ஒரு தொழிற்சங்க மீட்டிங் இருக்கிறது. என்னால் வகுப்புக்கு வர முடியாது. நீங்கள் ஒத்துழைத்தால், இன்றே அந்த வகுப்பை எடுத்து விடுகிறேன்' என்று சொல்லிக் கூடுதலாக வகுப்பு எடுத்துப் பாடம் நடத்திவிடுவார்.

ஐ.எஸ்.ஆர்.ஓ.வில் பணியாற்றியபோது, என்னை, மூன்று மாத காலப் பயிற்சிக்காக நாசாவுக்கு அனுப்பி வைத்தார்கள். அங்கே நான் நிறைய கற்றுக்கொண்டேன். ஒரு தடவை, ராக்கெட் தொழில்நுட்பத்தைப் பற்றிய கலந்தாய்வுக் கூட்டத்தில், நான் ஒரு சந்தேகம் கேட்டேன். அதற்கு அவர்களால் பதில் சொல்ல முடியவில்லை. அந்தக் கோணத்தில் நாசா விஞ்ஞானிகள் யாருமே அதுவரை சிந்திக்கவில்லை என்றும் தெரிய வந்தது. அந்த விஷயத்தைக் கவனிக்காமல் போயிருந்தால், ராக்கெட் ஏவும்போது பல சிக்கல்களைச் சந்திக்க வேண்டி இருந்திருக்கும்.

ஒரு தடவை செயற்கைக்கோள் ஏவும் முயற்சி தோல்வி கண்டபோது, கலாம், அதற்குத் தாம் முழுப் பொறுப்பேற்பதாக ஐ.எஸ்.ஆர்.ஓ. தலைவருக்குக் கடிதம் எழுதினார். பாராளுமன்றத்தில் அந்தத் தோல்வி கடும் விமர்சனத்துக்கு உள்ளா

னது. ஆனால் எங்கள் தலைவராக இருந்த பிரம்ம பிரகாஷ், தாம் தோல்விக்கு முழுப் பொறுப்பு ஏற்றுக்கொள்வதாகவும் கடுமை யாக உழைத்த விஞ்ஞானிகளைக் குறை சொல்ல வேண்டாம் என்றும் அரசைக் கேட் டுக்கொண்டார். பிறகு விஞ்ஞானிகளிடம் 'முழுமையான ஈடுபாட்டுடன் உங்களுடைய முழுத் திறமையையும் காட்டினீர்கள். அது போதும். வெற்றி, தோல்வியைப் பற்றி கவலைப் படாதீர்கள். தவறு நிகழ்ந்தால், அதிலிருந்து நாம் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதுதான் முக்கியம்' என்று கூறினார். இந்த நிகழ்ச்சியை கலாம், பலமுறை என்னி டம் நினைவு கூர்ந்து நெகிழ்ந்தது உண்டு.

சுமார் முப்பது ஆண்டுகள் விண்வெளி ஆராய்ச்சித் துறையில் பணியாற்றிய பின் ராஜினாமா செய்துவிட்டு, Technology Information Forecasting and Assessment Council (TIFAC) என்ற அமைப்பில் சேர்ந்தேன். அங்கே இன்று தொழில்துறையில் இந்தியா சந்தித்துக் கொண்டிருக்கும் சவால்கள் என் னென்ன, அவற்றுக்குத் தீர்வென்ன என்று விரிவாக ஆராய்ச்சிகளை மேற்கொண்டு, ஆய் வறிக்கையைத் தயாரித்தேன். இந்தப் பணியில் ஏராளமானவர்கள் பங்கேற்றனர். அதன் பல னாக உருவாக்கப்பட்ட எழுநூற்றுக்கும் அதிக மான அறிக்கைகளின் அடிப்படையில் அப் துல்கலாமும், நானும் இணைந்து உருவாக் கியதுதான் 'இந்தியா 2020' என்ற நூல்.


* ராஜன்

ஒரு போட்டோ எடுக்கச் செய்து மனம் மகிழ்ந்தார்'' என்ற ராஜனிடம்

'ஒரு விஞ்ஞானியாக, செயற்கைக்கோள், ஏவுகணை என்று படு சீரியஸ் மனிதராக இருந்த கலாம், ஜனாதிபதி யான பின் இந்த தேசத்தின் குழந்தைகள் மீது அதிக ஆர்வம் காட்டத் தொடங்கியதற்கு என்ன காரணம்?' என்றோம்.

''அதற்கு ஒரு விதத்தில் 'இந்தியா 2020'தான் காரணம் என்று சொல்லலாம். இந்த நாட்டில் இன்னும் சாதிக்கப்பட

# குழந்தைகளும்

கலாமுக்கு, பாரத ரத்னா விருது வழங்கப் பட்டபோது, அந்த விழாவுக்கு என்னுடைய அப்பாவும் கண்டிப்பாக வரவேண்டும் என்று விரும்பினார். அவ்விழாவுக்கு கலா மின் அண்ணனும் வந்திருந்தார். ஆனால், அவருடைய அண்ணனையும், என் அப்பா வையும் சேர்த்து ஒரு போட்டோ எடுக்கா மல் விட்டுவிட்டோமே என்று மிகவும் வருந்தினார். அவர் ஜனாதிபதியாகப் பதவி ஏற்றுக்கொண்டபோது, என் அப்பாவும் அவருடைய அண்ணனும் வந்திருந்தார்கள். அப்போது மறக்காமல் இருவரையும் சேர்த்து

வேண்டிய விஷயங்கள் ஏராள மாக உள்ளன. அவையெல்லாம் நிறைவேற தொலைநோக்கும், நீண்டகாலத் திட்டங்களும் அவசியம். நம் நாட்டின் கனவு களை நிறைவேற்றப் போகிற வர்கள் அவர்கள்தானே! குழந் தைகளுடன் கலந்துரையாடு வதும் அவர்களுக்குத் தக்க வழி காட்டுவதும் தேவை என்பது கலாமின் எண்ணம்'' என்றார் ராஜன்.

## ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு 

# எப்படி கரை சேர்ப்பேன்..?

ஒரே குடும்பத்தில் பிறந்த ஐந்து பிள்ளைகளும் செவிடர்கள், ஊமைகள்! படிக்கும்போதே அதிர்ச்சியாக இருக்கிறதா? ஆம், திருச்சி மாவட்டத்திலுள்ள நடுப்பட்டி எனும் கிராமத்தில்தான் இவர்கள் வாழ்கிறார்கள்.

பழனிச்சாமி நெருங்கிய உறவில் திருமணம் செய்கிறார். முதல் குழந்தை பெண் குழந்தை 'தங்கம்மாள்' என்று பெயரிடுகின்றனர். அதைக் கேட்கவோ, சொல்லவோ அவளால் முடியவில்லை. தொடர்ந்து பாண்டிச்செல்வம், வீரசினம்மாள், கமலாவள்ளி, சக்திவேல் என்று வரிசையாகக் குழந்தைகள் பாண்டிச்செல்வத்துக்கு. கண் பார்வையும் கிடையாது. இவர்களில் கடைசிப் பையன் சக்திவேல் மட்டும் உள்ளூர்ப் பள்ளியில் நான்காம் வகுப்பு படிக்கிறான்.

பழனிச்சாமிக்குத் தொழில் விவசாயம். நடுப்பட்டி, மழையை நம்பி விவசாயம் செய்கிற பூமி! பிழைப்புக்கு ஏழெட்டு வெள்ளாடுகள் மற்றும் மூன்று மாடுகளையும் வளர்க்கிறார் பழனிச்சாமி. ஆரோக்கியமான உடல் நிலையைப் பெற்ற பிள்ளைகளையே வளர்த்து ஆளாக்குவது கடினமாக இருக்கிற சூழ்நிலையில் 'இப்படிப் பட்ட' குழந்தைகளை வளர்த்து ஆளாக்கி நல்ல வாழ்க்கையை ஏற்படுத்தித் தருவது என்பது ஒரு சாதாரண விவசாயக் கூலியால் முடிகின்ற விஷயமா?

பழனிச்சாமி திருச்சி மாவட்ட ஆட்சியர் ஆசிஷ் வச்சானியிடம் மனு கொடுத்தார். அவர் மனுவைப் பெற்றவுடன், மாவட்ட மறுவாழ்வு மைய அலுவலர் ஆ. ஜோசப் சேவியரை அந்தக் கிராமத்துக்கு நேரில் சென்று பார்வையிட உத்தரவிட்டார்.

மாவட்ட மறுவாழ்வு மைய அலுவலர், வீர சின்னம்மாவை ஆசூர் கிராமத்தில் தையற் பயிற்சியில் சேர்த்துவிட்டுள்ளார். பாண்டிச்செல்வத்தை திருச்சி பிஷப் ஹீல் மறுவாழ்வு இல்லத்தில் துணி நெய்தல் மற்றும் ஸ்கிரீன் பிரிண்டிங் பயிற்சியில் சேர்த்துள்ளார். இருவருக்கும் உணவு தங்குமிடம் மற்றும் பயிற்சிக்கட்டணம் இலவசம். சக்திவேலை திருச்சி காதுகேளாதோர் மற்றும் வாய் பேசாதோர்க்கான சிறப்புப்பள்ளியில் சேர்த்துவிட முயற்சி செய்து வருகிறது மாவட்ட நிர்வாகம்.

"இந்த மூணு புள்ளைகளும் தன்னோட சொந்தக் கால்ல எதிர் காலத்தை ஓட்டிடும். மீதி ரெண்டு பொட்டைப் பிள்ளைங்களைகளோட வாழ்க்கை எனக்குப் பிறகு என்னாகும்னு தெரியல. அத நெனைச்சாத்தான் பயமாயிருக்கு. கடவுள் கண்ணத் தொறப்பாரா? என்கிறார் கண்ணீருடன்.

* பழனிச்சாமி தன் குடும்பத்துடன்...



## சிரிப்புச் சந்தை-4

# மாஸ்டர் மீது வடை!

அமரர் கல்கி

அப்பாசாமிக்கு இது தெரிந்ததுதான். ஸ்டுடியோவுக்கு வெளியில் ஹம்ஸாவைச் சந்திக்கலாமென்றாலோ, அதற்கும் ஓர் இடையூறு இருந்தது. மிஸ் ஹம்ஸா மற்ற நடிகைகளைப் போல், ஸ்டுடியோவிலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஜாகையில் வசிப்பவள் அல்லள்; தினம் வேலை முடிந்ததும் அவள் தன் வீட்டுக்குப் போய் விடுவாள். அவளுடைய புருஷனைப் பற்றிச் சிலர் ஒரு விதமாய்ச் சொன்னார்கள். ஆனால் எல்லாரும் 'புருஷன்' ஒருவன் இருக்கிறான் என்பதை ஒப்புக் கொண்டார்கள். அவன் எப்படிப் பட்டவனோ, என்னமோ?






மேலும் அவளை அப்படிப் பின் தொடர்வதற்கும் அவள் சம்மதிக்க வேண்டாமா? அவளுடைய மனோபாவத்தையோ சிறிதும் கண்டறிய முடியவில்லை. சில சமயம் அப்பாசாமியுடன் காதல்-காட்சியில் நடிக்கும் பொழுது 'இது நடிப்பன்று, உண்மைக்காதல்' என்றே தோன்றும். அவள் ஒரு மோகனச் சிரிப்பு சிரித்துக் கொண்டு இவனுடைய கன்னங்களைப் பரிகாசமாகக் கிள்ளும்போது, 'ஒரு நாளும் இது பொய்க் காதலாக - வேஷக்காதலாக - இருக்க முடியாது' என்று நமது விதூஷக சக்ரவர்த்தி நினைத்ததுண்டு. ஆனால் அந்தக் கிழ ஜமீந்தாருடன் அவள் காதல் செய்யும்போதும் அவ்வளவு உண்மையாகத்தானே தோன்றுகிறது!



அப்பாசாமி 'ஷுட்டிங்' நடந்த இடத்திலிருந்து, வேஷத்தைக் கலைக்கும் இடத்துக்கு மிக்க மனச் சோர்வுடன் போய்க் கொண்டிருந்தான். வழியில் ராமர், லக்ஷ்மணர், விசுவாமித்திரர், ஜனகர், சீதை ஆகியவர்களை அவன் பார்த்தான். இராமர் சிகரெட் புகை விட்டுக் கொண்டிருந்தார்; சீதை பீங்கான் கிண்ணத்தில் டீ குடித்துக் கொண்டிருந்தாள்; லக்ஷ்மணன் ஒரு பெரிய கொட்டாவி விட்டு, தன்னை மீறி வந்த தூக்கத்தைப் போக்கிக் கொள்வதற்காக ஒரு சிமிட்டாப் பொடியை உறிஞ்சினான். விசுவாமித்திரர் காதிலே பூணூலை மாட்டிக் கொண்டு அவசரமாய் எங்கேயோ போனார்.

இதையெல்லாம் பார்த்த அப்பாசாமிக்கு "இந்த வேஷமெல்லாம் எப்படிப் பொய்யோ, அதுபோல் உலக வாழ்கையே பொய்" என்ற எண்ணம் உதித்தது. இந்த உயிர் வாழ்விலேதான் என்ன ரஸம் இருக்கிறது? எதற்காக இந்த ஜீவனை வைத்துக் கொண்டு வாழ வேண்டும்...?

**சா**யங்காலம் ஆறரை மணிக்கு ஜார்ஜ் டவுன் துங்கப்ப நாயக்கன் வீதியில் அப்பாசாமி போய்க் கொண்டிருந்தான். அவன் கையில் ஒரு துணியிலே சுற்றப் பெற்ற ஒரு சிறு மூட்டை இருந்தது. அதற்குள் ஒரு டார்ச் லைட்டும், சுமார் பத்து அடி நீள மணிக்கயிறும் இருந்தன வென்பதை உங்களுக்கு நான் சொல்லத் தான் வேண்டியிருக்கிறது- மேலே கதையில் சுவாரஸ்யம் உண்டு பண்ணும் பொருட்டு.

மேற்படி துங்கப்ப நாயக்கன் வீதியிலிருந்து கேவல்தாஸ் சந்து பிரியும் இடத்தில் 'ஜரீஸ் மாளிகை' என்று ஒரு பிரம்மாண்டமான கட்டடம் கட்டப் பெற்று வந்தது. இரண்டு மச்சு ஏற்கெனவே கட்டியாகிவிட்டது. இன்னும் நாலைந்து மச்சுகளாவது கட்டுவார்களென்று அங்கே வானுறவோங்கி நின்ற விட்டங்கள், சாரங்களிலிருந்து தெரிய வந்தது.

இந்தக் கட்டடத்துக்குள், அப்புறம் இப்புறம் தன்னை ஒருவரும் கவனிக்க வில்லையா என்று பார்த்துக் கொண்டு அப்பாசாமி சரேலென்று நுழைந்தான். சில அடி தூரம் சென்றதும் நல்ல இருள் சூழ்ந்திருந்தது. காலால் தடவித் தடவி நடந்து நாலைந்து வாசற்படியைத் தாண்டி வெகுதூரம் உள்ளே சென்ற பிறகு மூட்டையை அவிழ்த்து, உள்ளேயிருந்த டார்ச் லைட்டை எடுத்துப் பொத்தானை அமுக்கினான். வெளிச்சம் எதிரே பளிச் சென்று அடித்தது. அந்த வெளிச்சத்தில், அவன் என்ன பார்த்தான் என்று நினைக் கிறீர்கள்? பயங்கரம்! பயங்கரம்!! கயிற்றிலே தொங்கிக் கொண்டிருந்த ஒரு மனித தேகம் தெரிந்தது.

எந்தக் கணத்தில் வெளிச்சம் அந்தத் தேகத்தின்மேல் பட்டதோ, அதே கணத்தில் அதன் தொண்டையிலிருந்து ஓர் உறுமல் சத்தம் வந்தது. இத்தகைய நிலைமையில், நீங்களும் நானுமாயிருந் தால், விழுந்தடித்து ஓடி, இருட்டில் எங் கேயாவது முட்டிக் கொண்டு திண்டாடு வோம்.

ஆனால் அப்பாசாமி சாமான்ய மனிதன் அல்லன்; நாடக மேடையில் இது மாதிரி சந்தர்ப்பங்களை எத்தனைமுறை பார்த்திருப்பவன்! அவன் ஒரு நொடியில் சட்டைப் பையிலிருந்த கத்தியை எடுத்துத் திறந்து கொண்டு அந்த மனிதன் உபயோகித்த அதே ஏணியில் ஏறிச் சட்டென்று கயிற்றை அறுத்து எறிந்தான்.

**கீ**ழே விழுந்த தேகம் சிறிது நேரம் பேச்சு மூச்சில்லாமல் கிடந்தது. டார்ச் லைட்டை முகத்துக்கு நேரே பிடித்துப் பதைபதைப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான் நமது ஹாஸ்ய நடிகன்! மெதுவாக மூச்சு வரத் தொடங்கியது. பிதுங்கிய விழிகள் உள் அமுங்கின. இன்னும் சில நிமிஷத்துக்கெல்லாம் அந்தத் தேகம் எழுந்து உட்கார்ந்து கம்மிய குரலுடன் "மாச்சுப் பெட்டி இருக்கிறதா?' என்று கேட்டது.

"மாச்சுப் பெட்டி எதற்கு? டார்ச் லைட் இருக்கிறதே?"'



"டார்ச் லைட் என்ன பிரயோசனம்-பீடி பத்த வைப்பதற்கு?"

அப்பாசாமிக்கு வெகு கோபம் வந்தது. "அடே முட்டாள், இத்தனை பெரிய காரியம் செய்துவிட்டு, சாவதானமாய்ப் பீடி பத்த வைக்க வேண்டுமென்கிறாயே, என்ன துணிச்சல் உனக்கு!" என்றான்.

"அதற்காக என்ன பண்ண வேண்டு மென்கிறாய்?"

"என்ன பண்ணுகிறதா! என் காலிலே விழுந்து கெஞ்சு, மன்னிப்புக் கேட்டுக் கொள். இல்லாவிடில் போலீஸ்காரனிடம் ஒப்புவித்து விடுவேன்."

"அப்படியா? உன் சமாசாரம் என்ன? நீ எதற்காக இங்கே வந்தாய்? கையிலே வைத்திருக்கும் கயிறு எதற்காகவோ?"

அப்பாசாமிக்குச் சிரிப்பு வந்தது. அதை அடக்கிக் கொண்டு "இதோ பார். நாம் இருவரும் ஒரே இடத்துக்கு, ஒரே காரியத்துக்காக வந்தது நல்லதுதான். நீ, எதற்காக இந்தக் காரியத்தைச் செய்யத் துணிந்தாய் என்று சொல்லு. அது சரியான காரியமாக இருந்தால், இந்தப் புதுக் கயிற்றை உனக்கே கொடுத்து விடுகிறேன். நான் வேறு கயிறு வாங்கிக் கொள்கிறேன்" என்றான்.

"அதெல்லாம் முடியாது."

"என்ன முடியாது?"

"இன்னொரு தடவை நான் தூக்குப் போட்டுக் கொள்வது முடியாத காரியம். நீ போட்டு விட்டுப் போவதாயிருந்தால் சொல்கிறேன்."

"அந்தப் பாவத்தையும் நான் சுமக்க வேண்டுமா? சரி சொல்லித் தொலை!"

**க**யிற்றில் தொங்கிய மனிதன் சொல்லுகிறான்:-

"ஐந்து வருஷத்துக்கு முன்னால் வரையில் நான் சந்தோஷமாயிருந்தேன். வன்னியத் தேனாம்பேட்டையில் எனக்குச் சொந்த வீடு இருக்கிறது. மௌண்ட் ரோடில் பழக்கடை வைத்திருந்தேன். மாதம் 30, 40 ரூபாய் வரும். வீட்டில் ஒரு பாதியை வாடகைக்கு விட்டிருந்ததிலும் பத்து ரூபாய் வந்தது. கவலை, கஷ்டம் இன்னதென்றே தெரியாமல் குஷியாக இருந்தேன்.

ஒருநாள் இரவு நான் கடையை மூடிக் கொண்டு வீட்டை நோக்கிப் போன



போது, எங்கள் வீதி மூலையில் ஓர் இளம் பெண் நின்று அழுது கொண்டிருந்தாள். அவளிடம் நெருங்கி, 'ஏனம்மா அழுகிறாய்?' என்று கேட்டேன். அவள், தானும் இன்னும் நாலைந்து ஸ்திரீகளும் ஒரு தனிவீட்டில் குடியிருந்ததாகவும் போலீஸ்காரர்கள் எல்லோரையும் அன்று விரட்டிவிட்டதாகவும், அந்த ஸ்திரீகளைத் தனக்குப் பிடிக்காதபடியால் அவர்களோடு போகாமல் பின்தங்கியதாகவும் சொன்னாள். பத்திரிகையில் இது சம்பந்தமான சில விவரங்களை நான் படித்திருந்தேன். புதிய போலீஸ் சட்டம் அமுலுக்கு வந்திருப்பதாயும், அதன்படி சென்னைப் பட்டணத்தில் துன்மார்க்கத்தைத் தொழிலாகக் கொண்ட ஸ்திரீகள் எல்லோரும் அந்தந்த விடுதிகளிலிருந்து விரட்டி விடப்படுவதாகவும் பத்திரிகையில் போட்டிருந்தார்கள். இந்தச் சட்டத்தினால் எத்தனையோ பெண்கள் அநாதைகளாகத் தெருவில் நிற்க நேரிடுமென்றும், அவர்களை ஆதரிக்கப் பண உதவி செய்ய வேண்டுமென்றும் சில புண்யவதிகளும், புண்யவான்களும் பத்திரிகையில் விண்ணப்பம் செய்திருந்ததையும் படித்திருந்தேன். இதனாலெல்

லாம் ஏற்கெனவே கலக்க முற்றிருந்த எனக்குத் திக்கற்றுத் தெருவில் நின்ற அந்தப் பெண்ணைப் பார்த்ததும் 'இவளை ஏன் நாம் ஆதரிக்கக் கூடாது?' என்று தோன்றிற்று. அதன் பலன்தான் இப்போது என்னை இந்தக் காரியம் செய்யத்தூண்டிற்று..."

"சரி, வீட்டுக்கு அழைத்துப் போனாய்; அப்புறம் என்ன நடந்தது."

"அப்புறம் என்ன? இரண்டு நாளைக்குள் வீட்டில் குடியிருந்தவர்கள் காலி செய்து விட்டுப் போய் விட்டார்கள். பிறகு யாரும் குடிவரவேயில்லை. பழக் கடையும் நஷ்டமாகி வந்தது. தினம் ஒரு ரூபாய் பழம்– ஆரஞ்சும் ஆப்பிளும்; அவளே தின்று விடுவாள்! வியாபாரத்தில் லாபம் எப்படி வரும்? இருந்த போதிலும் ஒரு மாதிரி சந்தோஷமாய்த்தானே இரண்டு மூன்று வருஷம் வாழ்க்கை நடத்தி வந்தோம். அவள் டாக்கியில் சேரும் வரையில்..."

"என்ன, டாக்கியில் சேர்ந்தாளா?"

"ஆமாம், டாக்கியில் சேர்ந்த பிறகு..."

"பெயர் என்ன? அவள் பெயர் என்ன?"

"குப்பம்மாள்..."

"நல்ல வேளை. மேலே சொல்லு."

"டாக்கியில் அவள் சேர்ந்த பிறகு என்னுடைய வாழ்க்கை நரகமாயிற்று. அவளைத் தினம் நான் ஸ்டூடியோவுக்குக் கொண்டு போய் விடவேண்டும்; திருப்பி சாயங்காலம் அழைத்து வரவேண்டும். வீட்டில் சமையல் செய்து தயாராய் வைத்திருக்க வேண்டும். வெந்நீர் போட்டுக் கூட வைக்க வேண்டும். இதெல்லாமாவது போகட்டும். டாக்கி நடிப்புக்கு வீட்டில் ஒத்திகை பார்க்கத் தொடங்கி விடுவாள்.

நான் கோபித்துக் கொண்டால் இடி, இடியென்று சிரிப்பாள். இதெல்லாமிருக்கட்டும். நேற்றைக்கு என்ன செய்தாள் தெரியுமா? ஸ்டூடியோவில் ஒரு காட்சியில் தேள்கள் வரவேண்டியிருந்ததாம். இவள் அந்தத் தேள்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு வந்து என் படுக்கையில் வேண்டுமென்று விட்டு விட்டாள். நான் அலறி அடித்துக் கொண்டு எழுந்தோடியதைப் பார்த்துச் சிரிக்கிறாள்!"

"அடி பாவி!" என்றான் அப்பா சாமி. அவனுக்கு அந்த மனிதன் மேல் உண்மையாகவே இரக்கம் உண்டாயிற்று. "நீ உயிரை விடத் துணிந்ததில் ஆச்சரியமில்லை. ஆனால் எங்கேயாவது ஓடிப் போய் விடுவதுதானே, பினாங்கு, சிங்கப்பூரைப் பார்க்க..?" என்றான்.

"பணமிருந்தால் அப்படிச் செய்யலாம். என் கையில் தம்படி இல்லை. அவள் சம்பாதிப்பதையெல்லாம் தன் பேரிலேயே பாங்கியில் போட்டிருக்கிறாள். பணமில்லாமல் எப்படிக் கப்பல் ஏறுவது? நீ வாக்குக் கொடுத்தபடி என்னை மாட்டி விட்டுத்தான் போக வேண்டும். இருக்கட்டும்; ஆனால் நீ எதற்காக வந்தாய்? என் மாதிரி காரணந்தானோ?"

"இல்லவே இல்லை!" என்று அப்பா சாமி அழுத்தமாய்ச் சொன்னான். "அதற்கு நேர் விரோதமான காரணம். ஒரு



பெண்ணின் மீது நான் காதல் கொண்டேன். அவளைப் பிரிந்து என்னால் வாழ முடியாது. அவள் இணங்க மாட்டாள் என்றுதான் உயிர் மேல் வெறுப்பு வந்தது."

"அந்தப் பெண் யாரோ?"

"அவளும் ஒரு டாக்கி ஸ்டார்தான்! ஆனால்..."

"அவள் பெயர் என்னவோ?"

"நாம்தான் இருவரும் சாகப்போகிறோமே? சொன்னால் மோசம் என்ன? அவள் பெயர் மிஸ் ஹம்ஸா."

**உ**ட்கார்ந்திருந்த மனிதன் எழுந்து ஒரு குதி குதித்தான். "பேஷ்! பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அவள்தான் நம்ப

பேர்வழி" என்றான்.

"என்ன உளறுகிறாய்?"

"உளறல் இல்லை; அவளே அவள் தான்."

"வேறு பெயரல்லவா சொன்னாய்?"

"ஆமாம், குப்பம்மாள் என்று சொன்னேன். அந்தப் பெயர் டாக்கிக்கு சுகப்படாது என்று மிஸ் ஹம்ஸா என்று வைத்துக் கொண்டாள்."

"என்ன!" என்று சத்தம் போட்டுக் கொண்டு அப்பாஸாமி எழுந்திருந்தான். டார்ச் லைட்டையும் கயிற்றையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

மற்றவன், "ஆமாம் ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. அவளுடன் வாழ முடியாமல் நான் தூக்குப் போட்டுக் கொள்ள வந்தேன். அவள் கிட்டவில்லையே என்று நீ சாக நினைத்தாய். இரண்டு பேரும் சாக

"தியேட்டரில் முறுக்கு விக்கிற பையன் விவரமான ஆளு..."

"எப்படிச் சொல்றே?"

"அறுவைப்படம்னா அனாசின் மாத்திரையையும் சேர்த்து விக்கிறானே!"

- எம்.அசோக்ராஜா

வேண்டாம். எனக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்து விடு. நாளையே நான் கப்பலேறிக் கண்காணாத சீமைக்குப் போய் விடுகிறேன். அப்புறம் திரும்பி வரவேயில்லை."

"எவ்வளவு? ஆயிரம் ரூபாயா?"

"ஆமாம்; ஆயிரம் ரூபாய்தான்; பிரமாதமில்லை. இருக்கட்டும், உன் பெயர் என்ன? ஒரு வேளை மாஸ்டர் மெதுவடை என்பது நீதானோ?"

"ஆமாம், நான்தான். உனக்கு எப்படித் தெரிந்தது?"

"அடாடா! நான் என்னத்தைச் சொல்ல? உன் பேரில் அவளுக்கு இருக்கும் அபிமானத்துக்கு அளவில்லை. இதோ பார்! (கன்னத்தைக் காட்டி) கிள்ளுக் காயம் தெரிகிறதா? நேற்று அவள் கிள்ளியதுதான். நான் அழுதேன். அப்போது அவள் 'சீ! இந்த ஒரு கிள்ளுக்கு அழுகிறாயே? மெதுவடையை மொத்தம் 27 தடவை கிள்ளியிருக்கிறேன். இன்னும் அவருக்கு அலுக்கவில்லை. உனக்குப் பதில் அவர் இந்த வீட்டில் இருந்தால் எவ்வளவு சௌகரியமாயிருக்கும்?' என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாள். ஐயையோ! அட பாவி! துரோகி! எங்கே ஓடுகிறாய்? ஐயோ கயிற்றைக் கூடக் கொடுக்காமல் போகிறாயே? என் கயிற்றையும் அறுத்து விட்டாயே! என்ன செய்வேன்! ஏ, மெதுவடை! நில்லு! நில்லு!..."

இதற்குள் ஒரே ஓட்டமாய் ஓடி வெளி வாசற்படி வரையில் சென்று விட்ட மாஸ்டர் மெதுவடை அங்கே நின்று திரும்பிப் பார்த்து, "அதெல்லாம் பலிக்காது அப்பேன்! நேரே வீட்டுக்குப் போய்ச் சேர். இதோ போலீஸ் ஸ்டேஷனில் உன்னைப்பற்றி எழுதி வைக்கப் போகிறேன். நீ பாட்டுக்குச் செத்துப் போய்விட்டால், அப்புறம் என் கதி என்ன ஆவது? மெதுவாக அவளை என் கழுத்தில் கட்டிவிடலாமென்று பார்க்கிறாயோ?" என்று சொல்லிவிட்டு இரண்டே தாண்டலில் வீதியை அடைந்து ஓடினான்.

**க**தை முடிந்தது. இந்தக் கதையை படமெடுத்து விடலாமென்று நினைக்கும் டாக்கி முதலாளிகளுக்கு மட்டும் ஒரு வார்த்தை சொல்லி முடிக்கிறேன். என்னுடைய அனுமதியில்லாமல் இதைப் படம் பிடிப்பவர்கள் கட்டாயம் கஷ்டத்துக்குள்ளாவார்கள். அவர்களில் யாராவது 'மாஸ்டர் மெதுவடை' என்ற சமூகப் படம் பிடிக்கத் தொடங்குவார்களானால், அவர்கள் அதை முடிப்பதற்குள் 'மிஸ்டர் ஆமைவடை' என்ற படம் வெளிவந்து விடுவது நிச்சயம்.

(அடுத்த இதழில்-
'சுண்டுவின் சந்நியாசம்'

ஸ்ரீ

சிறுகதை

அன்று சென்னையில் குழந்தைத் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவதைக் கண்டித்து ஒரு கூட்டம். ஆனால் தலைமை தாங்கியதோ சிவகாசியில் மிகப்பெரிய பட்டாசுத் தொழிற்சாலையின் அதிபர்! சூர்யாவுக்கு எல்லாம் எரிச்சலையே ஏற்படுத்தியது.

சூர்யா மத்திய தர வர்க்கத்தைச் சேர்ந்த 27 வயது இளைஞன். அந்த வயதுக்கேயுரிய துடிப்பும், பொறுப்பும் மிகுந்தவன். தனக்குக் கீழ் இரண்டு தங்கைகள், ஒரு தம்பி, திருமணமாகி சிறு வயதிலேயே சகோதரனிடம் அடைக்கலம் புகுந்த அத்தை என அத்தனை பேருடைய தேவைகளையும் தந்தையின் ஒரு சம்பளத்தில் சாமர்த்தியமாகச் சமாளிக்கும் தாய், தந்தையரின் சிரமத்தைப் புரிந்துகொண்டான். இளங்கலைப் படிப்பு முடிந்ததும் நல்ல வேலை கிடைக்கும்வரை காத்திருக்காமல், கிடைத்த வேலையைச் செய்துகொண்டே தபாலில் முதுகலைப் படிப்பையும் முடித்தான். தட்டச்சு, சுருக்கெழுத்து என அவனது வசதிக்கேற்ப தகுதியை வளர்த்துக் கொண்டான். ஆனாலும் இன்னும் நல்ல வேலைதான் கிடைத்த பாடில்லை. ஆயிற்று, அடுத்த மாதம் தந்தைக்குப் பணி ஓய்வு. எங்கு பார்த்தாலும் போட்டி. தகுதி அடிப்படையில் வேலை கிடைப்பதைவிட பணத்துக்கும், சிபாரிசுக்கும்தான் மதிப்பு இருந்தது. இப்போது பார்த்துக்கொண்டிருப்பது அதிக வேலை; குறைந்த வருமானம் என்ற நிலையில் இருந்தது. எனவே சூர்யா தனது வேலை வேட்டையை மேலும் மும்முரமாக்கினான். ஆனால் நல்ல வேலை கைக்கெட்டாமலே யிருந்தது.



அன்று மாலை வீடு திரும்பியபோது வீட்டில் ஏலமும் முந்திரியும் மணத்தன... அனைவருடைய முகங்களிலும் மகிழ்ச்சி! 'யாரேனும் தங்கையைப் பெண் பார்க்க வருகிறார்களா?' குழம்பினான்.

அம்மா அடுக்களையிலிருந்து முகத்தில் மலர்ச்சியும், தட்டில் இனிப்பும் ஏந்தி வந்தாள். "வாடாப்பா சூர்யா! கடைசியில நமக்கும் நல்ல காலம் பொறந்துடுச்சு. உனக்கு ஒரு நல்ல சேதி" அம்மா சஸ்பென்ஸ் வைத்துப் பேசினாள். 'அம்மாவுக்கு இப்படியெல்லாம்கூட பேசத் தெரியுமா?' ஆச்சர்யமாயிருந்தது சூர்யாவுக்கு. அம்மாவின் மகிழ்ச்சியைப் பார்க்கும் போது அன்று முழுவதும் வெயிலில் அலைந்த களைப்புகூட பறந்துவிட்டது. இப்போதைக்கு ஒரு நல்ல வேலை கிடைப்பதைத் தவிர என்ன நல்ல சேதி இருக்க முடியும் என நினைத்தவாறே "என்னம்மா அது?" என்றான்.

அம்மா தொடர்ந்தாள்... "சுந்தர் மாமா வந்திருந்தார். அப்பா வயசுதானே, அவருக்கு அடுத்த வாரம் ரிட்டையர்மென்ட். அதனால அவரோட கம்பெனில அவரையே வேற ஆள் பார்த்து வெச்சுட்டுப்

# கோணம்

போங்கன்னுட்டாங்களாம்!''

அம்மாவின் ஆவலைத் தடை செய்ய விரும்பாமல் அவளே சொல்லி முடிக்கட்டும் என மௌனமாகக் காத்திருந்தான். "சுந்தர் மாமா, உங்க அப்பாவும் ரிட்டையர் ஆகப் போறதையும், நீயும் இன்னும் நல்ல வேலை தேடிட்டுதான் இருக்கேங்கறதையும் ஞாபகத்துல வெச்சுட்டு உன்னை அந்த வேலைக்குச் சிபாரிசு பண்ணி இருக்கார்." அவனுக்கு நெஞ்சில் திடுக்கென்றது. சுந்தர் மாமா வேலை பார்த்து வந்தது சிவகாசியிலிருக்கும் பட்டாசு கம்பெனியில்.

குழந்தைத் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவதை மனதார எதிர்ப்பவன் அப்படிப்பட்ட இடத்திலேயே வேலை பார்ப்பதா? அவனது திடுக்கிடலைக் கவனிக்காமல் அம்மா பேசிக்கொண்டே போனாள்: "சூபர்வைசர் வேலையாம், எடுத்த எடுப்புலயே ஐயாயிரம் சம்பளமாம். வேலை பெர்மனன்ட் ஆனதும் இன்னும் கூடுமாம். திருப்தியா வேலை செஞ்சா மேனேஜரா கூட ஆக்கிடுவாங்களாம். மாமாவோட சிபாரிசால தொடக்கத்துலயே குவார்ட்டர்ஸ்கூட தராங்களாம். அடுத்த மாசம் அப்பா ரிட்டையர் ஆவாரே, அவரோட பென்ஷன் பணத்தையும், உன்னோட சொற்ப சம்பளத்தையும் வெச்சுட்டு பொம்பளப் பிள்ளைங்க கல்யாணத்துக்கு என்னடாப்பா பண்ணப் போறோம்னு கலங்கிப் போயிட்டேன். கடவுள் கண்ணைத் தொறந்துட்டார்." - அம்மா முந்தானையில் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

சூர்யா குடும்பச் சூழ்நிலையை உத்தேசித்து மனமேயில்லாமல் சிவகாசிக்குப் புறப்பட்டான். இப்போதைக்கு இந்த வேலையில் சேர்ந்து கொள்வோம், பிறகு வேறு வேலை தேடிக்கொள்ளலாம் என்ற முடிவோடுதான் சூர்யா பயணமானான். அங்கே அவனுக்கு மற்றுமோர் அதிர்ச்சி காத்திருந்ததை அறியாமல்.

அவன் வேலைக்குச் சேர

வேண்டிய அலுவலகத்துக்குச் சென்றதும்தான் தெரிந்தது- போன வாரம் குழந்தைத் தொழிலாளர்களைப் பணியிலமர்த்துவதை எதிர்த்து நடந்த கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய பெரிய மனிதரின் தொழிற்சாலை அது என்பது! அந்தக் கூட்டத்தில் குழந்தைத் தொழிலாளர்களை அமர்த்துவதை ஆதரித்து ஏதோ பேசியதாகக்கூட கேள்விப்பட்டு எரிச்சலடைந்திருந்தான் சூர்யா. இப்போது அந்த மனிதரின் அலுவலகத்திலேயே பணிபுரிய நேர்ந்ததை எண்ணித் தனக்குள் மறுகினான்.

சுந்தர் மாமா அவனை முதலாளியிடம் அறிமுகம் செய்து வைத்தார். அவர் இன்முகத்தோடு வரவேற்றுப் பேசினார். சுந்தர் மாமாவைப் பற்றிப் புகழ்ந்து பேசினார். அவர் சேர்த்துவிட்டதாலேயே சூர்யாவின் திறமை, உழைப்பைப் பற்றி தமக்குக் கவலையில்லை என்று தமது நம்பிக்கையை வெளிப்படுத்தினார். அவர் எவ்வளவு கனிவாய்ப் பேசினாலும் சிறு குழந்தைகளை வேலைக்கு வைத்திருப்பவர் என்ற உறுத்தலால் இயல்பாய் இருக்க முடியாமல் சூர்யா திணறினான்.




சூர்யா வேலையில் சேர்ந்து ஒரு வாரமாகிவிட்டது. இன்னமும் தொழிற்சாலையைச் சுற்றிப் பார்க்கக்கூட நேரமிருக்கவில்லை. அவனுக்கு அதில் விருப்பமுமில்லை. குடிகாரத் தகப்பனுக்காகவும் அவனிடம் அடிபட்டு மிதிபட்டு குடும்பத்தைக் காக்க நினைக்கும் தாய், ஒட்டிப் போன வயிறோடும், கண்களில் ஏக்கத்தோடும் திரியும் உடன் பிறந்த சின்னஞ்சிறுசுகளுக்காகவும் தங்கள் விளையாட்டுப் பருவத்தைத் தொலைத்துவிட்டுக் கண்களில் கனவுகளைச் சுமந்துகொண்டு வேலை செய்யும் குழந்தைகளைக் காண வேதனைதானே மிஞ்சும்! அன்று முதலாளியே அவனைத் தொழிற்சாலையைச் சுற்றிப் பார்க்க அழைத்தபோது மறுக்க முடியாமல் சென்றான்.

தொழிற்சாலைக்குள் சென்றதும் அவனை முதலில் கவர்ந்தது அங்கிருந்த சுத்தமும், வேலை செய்துகொண்டிருந்த குழந்தைகளின் முகங்களிலிருந்த மகிழ்ச்சியும்தான்! ஒருவரோடொருவர் பேசாமல் வேலை நடந்தபோதும் அக்குழந்தைகளின் முகத்தில் தெரிந்த மகிழ்ச்சியும் அமைதியும் அவனுக்கு ஆச்சர்யத்தை ஏற்படுத்தின. சாப்பாட்டு நேரம் வந்ததும் குழந்தைகள் வரிசையாகச் சாப்பாட்டறைக்குச் சென்றனர். சாப்பாட்டு அறை என ஒன்று இருந்ததே அவனுக்கு அதிசயம். அதைவிட அதிசயமாய் அவர்களுக்குச் சத்தான உணவு அங்கே வழங்கப்பட்டது. கீரை, காய்கறிச் சாம்பார், மோர் என எளிமையான, ஆனால் சத்தான உணவு. முதலாளியைப் பார்த்ததும் குழந்தைகள் கூச்சலிட்டு தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். சூர்யா மகிழ்ச்சி கலந்த ஆச்சர்யத்தோடு அவரைப் பார்த்தான். "என்ன தம்பி பார்க்கறே! குடும்பத்துக்குச் சோறுபோட உழைக்கும் இந்தப் பிஞ்சுகள் பாதிநாள் தன் வயித்துக்கே இல்லாம வேலை செய்

யறதைப் பார்த்தேன். மொத்த குடும்பத்துக்கும் என்னால சோறு போட முடியாது. ஆனா என்கிட்ட வேலை பார்க்கற குழந்தைகளுக்கு ஒருவேளையாவது எளிமையா சாப்பாடு போட முடியுமே, அதான் இப்படி ஓர் ஏற்பாடு'' என்றார்.

தொழிற்சாலைக் கட்டடத்தின் பின்பகுதிக்கு வந்ததும் அவனுக்கு மற்றுமோர் ஆச்சர்யம் காத்திருந்தது. அங்கே பரந்த புல்வெளியும், ஒருபுறம் சில கீற்றுக் கொட்டகைகள் கரும் பலகையுடனும். மறுபுறம் குழந்தைகள் விளையாட சில ஊஞ்சல்களும், சீசாக்களும் இருந்தன. சூர்யா கேட்காமலே முதலாளி அதற்கும் விளக்கம் அளித்தார்.

''எத்தனையோ பிள்ளைங்க படிக்க ஆசைப்பட்டாலும் குடும்பச் சூழ்நிலையால வேலைக்கு வராங்க. அப்படிப் படிப்புல ஆர்வம் உள்ள பிள்ளைங்களுக்காக வேலை நேரம் முடிஞ்சதும், கொஞ்ச நேரம் விளையாட விட்டுப் பிறகு ஒரு மணி நேரம் படிப்பு சொல்லித் தர்றோம். ஞாயிற்றுக்கிழமைகள்ல பிள்ளைங்க ஆசைப்பட்டா வந்து விளையாடட்டும்னு இந்த கேட்டை மட்டும் பூட்டறதே இல்லை தம்பி! எனக்கும் குழந்தைகளை வெச்சு வேலை வாங்கறது பிடிக்கலதான் தம்பி! ஆனா நான் ஒருத்தன் மட்டும் இதுங்களை வேலைக்கு வெச்சுக்க மாட்டேன்னு சொல்றதால எதுவும் மாறிடல. இன்னும் சில வக்ரம் பிடிச்ச முதலாளிங்ககிட்ட வேலைக்குப் போய் பலவிதமா கஷ்டப்படுதுங்க. வீட்லபோய், ஸ்கூலுக்கு அனுப்பச் சொன்னா, நீயா சோறு போடுவேன்னு கேட்பாங்க! என்னாலானது, ஓரளவு நல்ல சம்பளம், சாப்பாடு எல்லாம் குடுத்து வேலைக்கு வெச்சிருக்கேன். சில பிள்ளைங்க பத்தாவது பிரைவேட்டா படிச்சுகூட பாஸாயிருக்குது தம்பி'' என்றார் பெருமையுடன். கூடவே ஒரு கவலையும் அவர் முகத்தில் தெரிந்தது.

''சுந்தர் ஐயா இருந்த வரைக்கும் பிள்ளைங்க படிப்பை அவர் பார்த்துக்கிட்டார். இப்போ அவர் வேலையை விட்டுப் போறதுமில்லாம ஊரை விட்டே போறார்! அவர் இடத்துல இருந்து பார்த்துக்க நல்ல ஆள் தேடணும்.''

அவர் முடிக்குமுன் வேகத்தோடு குறுக்கிட்ட சூர்யா, ''எதுக்கு ஐயா வேற ஆள் தேடணும்? அந்தப் பொறுப்பை சந்தோஷமா நான் பார்த்துக்கறேன்'' என்றான்.

''சந்தோஷம் தம்பி, ரொம்ப சந்தோஷம்! என்னோட கவலை தீர்ந்தது. உன்னை மாதிரியே ஒவ்வோர் இளைஞனும் இருந்துட்டா ஊரே முன்னேறிடும்'' என்றார் முதலாளி.

'இவரைப் போய் தப்பா நினைத்து விட்டோமே' என்று வெட்கமாக இருந்தது சூர்யாவுக்கு.

○

## பா. விஜய்



ஜெயங்கொண்டம் உட்கோட்டைக் காரரான இவர், கோவையில் வளர்ந்து அங்கேயே படித்தார். பாக்யராஜின் 'ஞானப்பழம்' படத்தின் மூலம் அறிமுகமாகி, 'கறுப்புதான் எனக்குப் புடிச்ச கலரு' மூலம் பிரபலமானார். 'ஒவ்வொரு பூக்களும்' பாட்டுக்கு தேசிய விருதினைப் பெற்றார். வாலி இவரைத் தம் கலையுலக வாரிசாக அறிவிக்க, கலைஞர் 'வித்தக கவி'ப் பட்டம் கொடுத்தார். ப்ளஸ்டூ முடிச்சுட்டு, புலவர் சுப்ரமணியம்கிட்ட தமிழ் இலக்கியம் படிச்சிருக்காரு. இப்பத்தான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலே எம்.ஏ. பட்டம் வாங்கியிருக்கார். லேனா இவரது துணைவி விஷ்வா இவரோட வாரிசு. இவர் பாட்டை ஆராய்ச்சி செய்து, இதுவரை 35 பேர் பட்டம் வாங்கியிருக்காங்களாம்!

நளினி சம்பத்குமார்



# யமுனாவைக் காப்பாற்றுங்க...

**நா**டு முழுவதுமே நவராத்திரி கொண்டாட்டங்கள் களை கட்டி இருக்கு. ஒவ்வொரு வருடமும் டெல்லி யிலும் ரொம்பவே விமரிசையாகக் கொண்டாடப்படுது. ஆனா நவராத்திரி ஏன் வருதோன்னு யமுனா நதிதான் புலம்பிக்கிட்டு இருக்கு. போன வருஷம் துர்கா பூஜைங்கற பேர்ல முந்நூறு துர்கா பொம்மைகளைக் கொண்டு வந்து கரைச்சாங்க. 36 டன் பெயின்ட் மற்றும் சிமென்ட், 15 டன் பூக்கள், தேங்காய் நார்கள், துணிமணிகள்னு போட்டதுல யமுனையே கலங்கிடுச்சு. இந்த வருஷம் இன்னும் ஆயிரம் பொம்மைகளைக் கொண்டு வந்து யமுனைல போடப் போறாங்களாம். முந்நூறு துர்கா பூஜா சமாஜங்கள் இயங்கிக்கிட்டு இருக்கு. டெல்லி அரசு இந்த வருஷம் துர்கா பொம்மைகள் செய்றவங்ககிட்ட 'தண்ணில ஈஸியா கரையற களி மண்ணால சின்னதா பொம்மைகளைச் செய்யுங்க. பெயின்ட்டைக் கலந்து யமுனையைக் கலங்க வெச்சுடாதீங்க. பூஜை முடிஞ்ச கையோட பூமாலை, ஜரிகைத் துணிகள் போன்ற அலங்காரங்களைத் தயவு செய்து எடுத்துடுங்க'ன்னு சொல்லி இருக்காங்க. பார்ப்போம், இந்த வருஷம் யமுனை தப்பிக்குதான்னு!

**'டெ**ங்கு' காய்ச்சல் பிடில டெல்லி ரொம்பவே கடுமையா மாட்டிக்கிட்டு தவிக்குது. இது வரைக்கும் நாற்பத்து மூன்று பேருக்கு 'டெங்கு' காய்ச்சல் வந்திருக்கு. ஏதாவது செஞ்சு டெங்குவைப் பரப்பும் கொசுவை ஒழிச்சுடணும்னு ரொம்பவே தீவிரமா இருக்கு டெல்லி அரசு. டெல்லி முனிசிபல் கார்ப்பரேஷன் சுமார் நாலரை லட்சம் வீடுகள்ல கொசுவை அழிச்சு டெங்குவைத் தடுத்திருக்காங்க.



**ஆ**ஸியாவிலேயே மிகப் பெரிய சிறைச்சாலையான டெல்லியின் திஹார் ஜெயில்ல இடப்பற்றாக்குறை ஏற்பட்டிருக்கு. போன வருஷம் 12,371 கைதிகள் இருந்த ஜெயில்ல ஆகஸ்ட் மாதக் கணக்குப்படி 14,313 கைதிகள் இருக்காங்களாம். மூணு கைதிகள் இருக்க வேண்டிய செல்லுல எட்டு கைதிகள் வரைக்கும் இப்போ இருக்காங்களாம்.

ஃபேக்ஸ் ஃப்ரம் டெல்லி

தேவை

# ஸ்கூலுக்குப் போகிறார் கபிலன் வைரமுத்து...

**லாவண்யா** 

அண்மையில் தமிழக அரசின் பள்ளிக் கல்வித்துறை அமைச்சரவையை சில இளைஞர்கள் பரபரப்பாக்கினார்கள். கபிலன்வைரமுத்து மற்றும் அவரது பள்ளி நண்பர்கள் இணைந்து நடத்தி வரும் 'இளைஞர் சமுதாய முன்னேற்ற சங்கம்' செய்த வேலைதான் அது. நூற்றுக்கும் மேற்பட்ட அரசுப் பள்ளிகளுக்கு நேரடியாகச் சென்று பார்வையிட்டு, பள்ளிகளில் காணப்படும் குறைபாடுகள், தேவைகளை விசாரித்து அவற்றைப் புகைப்பட ஆதாரங்களோடு ஓர் ஆய்வறிக்கையாக அமைச்சர் தங்கம் தென்னரசுவிடம் வழங்கியிருக்கிறார்கள்.

''பாடத்திட்டங்களையெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டு வெறும் பள்ளி கட்டமைப்பு மற்றும் பள்ளி சுற்றுப்புறம் தொடர்பாக இந்த ஆய்வை மேற்கொண்டோம். காற்றோட்ட வசதிக் குறைவும், கழிவறை வசதி குறைவும் பெரும்பாலான பள்ளிகளிலே காணப்பட்டன. 'பள்ளிச்சுவர்களில் கதவுகளில் சினிமா அரசியல் போஸ்டர்கள் ஒட்டப்படுவதை எங்களால் தடுக்க முடியவில்லை' என்று தலைமையாசிரியர்கள் வருத்தம் தெரிவித்தார்கள். பல சத்துணவு சமையலறை கூடங்கள் பராமரிக்கப்படாத நிலையில் இருக்கின்றன. கிராமத்துப் பள்ளிகளின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. அவற்றில் பெரும் மாறுதல்களைச் செய்ய வேண்டும் என்று அமைச்சரிடம் கூறினோம். பள்ளிகளிலும் கல்லூரிகளிலும்தான் சமூகம் உருவாகிறது என்பதால் இந்தப் பணியை மேற்கொண்டோம். பள்ளிகளை முன்னேற்ற அமைச்சரவைத் தீட்டும் திட்டங்களுக்கு எங்கள் பணி பெரிதும் உதவி புரியும்'' என்கிறார் கபிலன் வைரமுத்து.



''ஈழத்தமிழர்களுக்காகப் போராட்டம் நடத்தவில்லையா? இராமேஸ்வரம் சென்று தமிழ் அகதிகளைச் சந்தித்தீர்களாமே...''

சுதந்திர தினத்தன்று இராமேஸ்வரம் மண்டபத்துக்குச் சென்று தமிழ் அகதிகளைச் சந்தித்து அவர்களோடு உரையாடிவிட்டு 30,000 ரூபாய் மதிப்பிலான உணவு பொருட்கள் மற்றும் மருந்துகளை வழங்கி வந்தோம். அகதிகள் முதலில் விசாரணை முடிந்ததும் 250 ஏக்கர் பரப்பிலான முகாமில் தங்க வைக்கப்படுகிறார்கள். குழந்தைகள் படிக்க பள்ளி அமைக்கப்பட்டிருக்கிறது. 'குண்டு சத்தமில்லாமல் தூங்க முடிகிறது' என்கிறார்கள். அதே நேரத்தில் 'உணர்வே இல்லாமல் எங்களை வச்சு அரசியல் நடத்த வேணாம்னு சொல்லுங்க' என்று சொன்னார்கள் என்கிறார் கபிலன்.

# குட்டைப கூல்டிரிங்ஸ்!

—கவர் ஸ்டோரி





# புதுமைப் போட்டி! புதுமைப் பரிசு!

உங்களுக்கும்... உங்கள் நண்பருக்கும்



# தானம்!

—பரிசுக்கதை

தீபாவளி சிறப்பிதழ்!

# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!

இன்னும் பல சுவையான பகுதிகள்...

இப்போது குருகுலவாஸக் கல்வி முறை அடிபட்டுப் போய்விட்டாலும், இன்றைக்கும் யுவர்களைத் தப்பான உணர்ச்சி வேகங்கள் அடித்துக்கொண்டு போகாமல் ரக்ஷிப்பதற்கு, பக்தியையும், விநயத்தையும்விட்டால் வேறு உபாயமே யில்லை. தெய்வத்திடம் பக்தியும், அகத்திலே தாயிடமும் - தகப்பனாரிடமும், கல்விச் சாலையில் ஆசிரியர்களிடமும் கட்டுப் பட்டு மரியாதை காட்டுவது என்ற ரூபத்தில் பக்தியும் மாணவர்களுக்கு அத்யாவச்யம்.

பக்தியுடன் ஸ்வாமியிடம் தினமும் இரண்டு வேளையும் கால் மணி, அரைமணி நேரம் ஜபம், பிரார்த்தனை செய்வது, அவ்வப்போது கோயிலுக்குப் போவது, ஸத்கதா ச்ரவணம் செய்வது, தெய்வீகமான ஆத்ம ஸம்பந்தமான நூல்கள் கொஞ்சம் படிப்பது ஆகியன அவர்களுக்கு ரொம்பவும் நல்லது செய்யும்.

# கல்வியே தெய்வம்!

ஆனாலும் இங்கேயுங்கூட நான் ஜாக்ரதையுடனேயே கால் மணி - அரைமணி பிரார்த்தனை, 'கொஞ்சம்' தெய்வபரமாகப் படிப்பது என்று கால அளவைக் குறுக்கிக் கொடுத்திருக்கிறேன். ஏன் குறுக்கினேன் என்றால், மாணவர்களுக்கு முக்கியம் படிப்புதான். அதிலேதான் அவர்கள் மிக நிறைய கவனம் செலுத்த வேண்டும். அப்படிப் பார்க்கும்போதுதான் 'ஆவரேஜ்', சராசரி என்ற நிலையிலுள்ள ஒரு மாணவன், தெய்வ சம்பந்தமாகவேகூட ரொம்பவும் பொழுதைச் செலவு செய்து படிப்புக்கு ஊறு விளைவித்துக் கொள்ளக் கூடாது என்ற அபிப்பிராயத்தில் பக்தி பண்ணுவதற்கு கால அளவைக் குறுக்கிக் கொடுத்தேன். நல்ல புத்திசாலியாக இருந்து, படிப்புக்கு அதிகப்பொழுது செலவிடத் தேவையில்லாதவர்களுக்கு இந்தக் குறுக்கல் இல்லை. அதே ஸமயத்தில் அவர்களுக்குக்கூட இந்தக் காலகட்டத்தில் படிப்புதான் முதல் முக்யத்வம் என்ற ப்ரக்ஞை மறக்கக் கூடாது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

அருள்வாக்கு

**பட்டுக்கோட்டை பிரபாகர்** 

# லட்சியம்

**ப**த்ரியைப் பார்த்து அதிர்ந்து போன சிவா வேகமாக வீட்டின் பின்பக்கம் வந்து சமையலறை ஜன்னலில் எட்டிப் பார்த்து, ரகசியக் குரலில், "அம்சா...ஏய்...அம்சா..." என்றான்.

பாலைச் சுட வைத்துக்கொண்டிருந்த அம்சா திரும்பிப் பார்த்து, "வந்துட்டீங்களா? என்ன, பின் பக்கமா..." என்றவளை முடிக்க விடாமல், "கத்தாதே! ஜன்னல் கிட்ட வா, சொல்றேன்" என்றான் சிவா.

அருகில் வந்தவள், "மாப்பிள்ளை அவர் சிநேகிதரோட வந்திருக்காரு. உள்ள வந்து அவரக் கூப்புடுங்க" என்றாள்.

"தெரியும்டி. வயல்ல இருந்தப்பவே பார்த்துட்டுதான் 'விழுந்தடிச்சி ஓடி வந்தேன். அந்தச் சிநேகிதருகிட்டதான் பாண்டிச்சேரி போனப்போ மாப்பிள்ளையைப் பத்தி விசாரிச்சேன் அம்சா."

"அடக்கடவுளே! ஏன் இப்படி செஞ்சீங்க?"



"என்னடி வெளாங்காதவளா இருக்கே? பஸ் ஸ்டாண்டுல எதேச்சையா அவரைப் பார்த்தேன். சாதாரணமா விசாரிச்சேன். அவரு மாப்பிள்ளையோட சிநேகிதரா இருந்துத் தொலைப்பாருன்னு எனக்கு என்ன ஜோசியமாத் தெரியும்?"

"அவரும் நான் அவரோட ஃபிரண்டுதான்னு சொல்லலையா?"

"இல்லையே... என் மேல சந்தேகமா, என்னைப்பத்தி எப்படி விசாரிக்கலாம்னு சண்டை போடறதுக்குத்தான் மாப்பிள்ளை வந்திருக்காருன்னு நினைக்கிறேன். அந்தாளு போட்டுக் குடுத்துட்டான்னு நினைக்கிறேன்."

"நீங்களே எதுக்கு இப்படிக் கற்பனை பண்ணிக்கிறீங்க? உள்ளே வந்து பேசுங்க, வாங்க!"

"இல்லை, இப்படி செய்யலாம்."

"எப்படி?"

"நீ ஏதாச்சும் சொல்லி அந்த ஃபிரண்டு தம்பியை மட்டும் வெளில அனுப்பி வையி. நான் தனியாப் பேசி என்ன ஏதுன்னு விவரம் தெரிஞ்சுக்கறேன். அப்புறமா உள்ள வந்து மாப்பிள்ளைகிட்ட பேசறேன்" என்றான் சிவா.

"நல்ல தர்மசங்கடங்க இது! சரி," என்று அம்சா கூடத்துக்கு வந்தாள்.

**கை**களைக் கட்டிக்கொண்டு மஞ்சரி நின்றுகொண்டிருக்க, பத்ரியும், குமரனும் எதுவும் பேசாமல் சீடை சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

"அக்கா, உங்க நாத்தனார் ஒரு வார்த்தை பேசறதுக்கு நான் எவ்வளவு தரணும்?" என்றான் குமரன்.

"நல்லா பேசுவா தம்பி. ஆரம்பிச்சா நிறுத்தறதுதான் கஷ்டம். வெக்கம் இருக்குமில்ல? மஞ்சரி, பாலைச் சூடு பண்ணிட்டேன். நான் கடை வரைக்கும் போய்ட்டு வந்திடறேன். மாப்பிள்ளைக்குக் காபியா, டீயான்னு கேட்டுப் போட்டுக் கொடு" என்ற அம்சா பத்ரியைப் பார்த்து, "எங்க தெருமுனையில ஒரு அம்மன் கோயில் இருக்கு. அந்தக் கோயில் சுவர்ல பிரமாதமா படம் வரைஞ்சிருப்பாக. அவங்க

தொடர்கதை



பேசிட்டிருக்கட்டும். நீங்க வேணா போய்ப் பார்த்துட்டு வாங்களேன்" என்றாள்.

சிரித்த பத்ரி, "புரியுதுங்க. தப்புதான். இதை நீங்க சொல்லாமலே நான் செஞ்சிருக்கணும்"



என்று எழுந்து, "குமரன், போய்ட்டு மெதுவா வர்றேன்" என்று வெளியே சென்றான்.

புறப்பட்ட அம்சாவை, "அண்ணி, கடைக்கு அப்புறம் போங்களேன்" என்றாள் மஞ்சரி.

"புரியாதவ மாதிரி நடிக்காதே. கல கலன்னு மனசு விட்டுப் பேசு. போய்ட்டு வந்துடறேன்" என்று அம்சாவும் வெளியேறினதும் படபடப்பாக நின்றாள் மஞ்சரி.

அவளுடைய மேலுதட்டின் மேல் புள்ளி புள்ளியாக வியர்வை அரும்பி நிற்பதைப் பார்த்த குமரன் தன் கைக்குட்டையை நீட்டினான்.

"வியர்வை! துடைச்சுக்கோ மஞ்சரி!"

"பரவால்லை" என்று புடைவை முனையால் ஒற்றிக்கொண்டு மீண்டும் கைகளைக் கட்டிக்கொண்டாள்.

"இதென்ன, பள்ளிக்கூட மைதானத் துல பிரேயருக்கு நிக்கிற மாதிரி நிக்கிறே? மஞ்சரி, முதல்ல உக்காரு! அட! உக்கா ருன்னு சொல்றேன்ல!" என்று குமரன் செல்லமாக அதட்டியதும் அங்கிருந்த மர ஸ்டூலில் பாதியில் தொற்றினாற்போல அமர்ந்தாள்.

"என்னைப் பாரு!"

"என்ன, சொல்லுங்க" என்றாள் பார்க் காமல்.

"நேருக்கு நேரா முகத்தைப் பார்த்துப் பேசக்கூடாதா?"

"என்னன்னு சொல்லுங்களேன்" என்றாள் வளையல்களை நிமிண்டிக் கொண்டு.

"சரி. பார்க்க வேணாம். ஆனா மனசுல என்ன இருக்கோ, அதை அப்படியே மாத்தாம சொல்லணும். என்னைக் கல்யா ணம் செஞ்சுக்கறதுல உனக்கு சந்தோஷம் தானே?"

முகத்தில் உதித்த மலர்ச்சியை வெட் கத்தால் தடை செய்தாள். பிரிய இருந்த உதடுகளைக் கட்டுப்படுத்தினாள்.

"கேக்கறேனில்ல?"

ஆமோதித்துத் தலையசைத்தாள்.

"ம்கூம். இந்தத் தலையாட்டி வேலை எல்லாம் வேணாம். வாயைத் திறந்து சொல்லணும்."

"ம்" என்றாள்.

"ம்? கேக்கலை!" என்றான்.

"ஆமாம்னு சொன்னேன்" என்றாள் அவளுக்கே கேட்காமல்.

"எங்கிட்ட பேசறதுக்குத் தயக்கமா இருக்கா?"

"ப...பயமா இருக்கு."

"பயமா? நான் என்ன டைனோசரா? எதுக்குப் பயம்?"

"வந்து... உங்களை... ஒண்ணு... இல்ல.. வேணாம்..."

"என்ன? என்னை என்ன கேக்கணும்? கேளு! ம்... கேளு...மஞ்சரி!"

"ஒண்ணுமில்ல, விடுங்க."

"பார்த்தியா? இதான வேணாங்கறது! ஏதோ கேக்கணும்னு ஆரம்பிச்சே... பின்னே ஏன் முழுங்கறே? இங்க வேற யாரு இருக்காங்க? கேளு மஞ்சரி! கமான். ஐ ஸே!"

"வந்து... எதுக்கு என்னைப் போயி செலக்ட் பண்ணீங்க?"

பதிலுக்குத் தவித்தான் குமரன்.

உன்னை நான் எங்கே தேர்வு செய் தேன்? என் பெற்றோர் தேர்வு செய்தார் கள். நான் பூம்பூம் மாடு மாதிரி தலை யாட்டினேன். அதுதானே உண்மை? உன் இடத்தில் சங்கரியோ, பத்மினியோ, சங்கீதாவோ யாராய் இருந்தாலும், நான் அதைத்தான் செய்திருப்பேன். இந்தத் திருமணம் அவர்களின் நிம்மதிக்காக ஒப்புக்கொண்ட ஒன்றுதானே?

இந்த உண்மைகளை, பாவம் இவளி டம் எப்படி சொல்ல முடியும்? ரொம்ப நியாயமான கேள்வி. ஏதோ ஒரு நியாய மானக் காரணத்தைப் பதிலாக எதிர்



பார்க்கும் கேள்வி. என்ன சொல்வேன்?

"உன்னை நான் செலக்ட் பண்ணதில ஆச்சரியப்படறதுக்கு என்ன இருக்கு?"

"இல்ல... அந்தஸ்துன்னு பார்த்தா..."

"அதை நாங்க பாக்கலை. இன்னும் ஏழு தலைமுறைகளுக்கு எங்கப்பா சம் பாதிச்சுக் குவிச்சுட்டார். இன்னும் குவிஞ்சுகிட்டே இருக்கு. பண விஷயத்தில ஒரு திகட்டலே வந்துடுச்சு எனக்கு. எந்த ஒரு விஷயமும் எனக்கு ஏக்கமா இருக் குறதில்லை, மஞ்சரி. ஒரு பென்சில் கேட்டா பத்து பேனா கிடைச்சிருக்கு. சைக்கிளுக்கு ஆசைப்பட்டப்ப தனியா டிரைவரோட காரே கிடைச்சிருக்கு. அத னால கல்யாண விஷயத்துல அதெல்லாம்

பாக்கலை. அப்பா, அம்மாவுக்கு ஜாதகப் பொருத்தத்தில நம்பிக்கை உண்டு. அத மட்டும்தான் பார்த்தாங்க. வந்தோம்... பார்த்தோம். உன்னை வேணாம்னு சொல்றதுக்கு எந்தக் காரணமும் இல்லை, மஞ்சரி. நீ அழகாத்தானே இருக்கே..."

"அய்யே... பொய்யி!" என்றாள்.

"சத்தியம் செய்யணுமா? கையை நீட்டு!"

"மாட்டேன்."

"கையை நீட்டேன்; சொல்றேன்."

"வேணாம்."

"சத்தியம் செய்றதுக்குக் கேக்கலை. இதைக் கட்டி விடறதுக்கு" என்று தங்கத்தில் செயின் போட்ட கைக் கடிகாரத்தை அதன் பெட்டியிலிருந்து எடுத்தான் குமரன்.

"ஏற்கெனவே நிறைய நகை போட்டுட்டீங்களே... போதுமே..."

"இது நகை இல்லை, வாட்ச்! உன்னைத் தனியா முதன்முதலா பார்க்க வர்றப்போ ஏதாச்சும் கொடுக்காம எப்படிப் போறது?"

"அத்தை கொடுக்கச் சொன்னாங்களா?"

"நான் இங்க வந்தது எங்கம்மா, அப்பாவுக்குத் தெரியாது."

"அச்சச்சோ!"

"சரி, இந்தா, நீயே கட்டிக்கோ."

மஞ்சரி வாங்கிக்கொண்டாள்.

"வேற ஏதாவது கேக்கணுமா?"

"நான் வேலைக்குப் போகணும், என் கால்ல நிக்கணும்னு ஆசைப்பட்டேன். திடுதிப்புன்னு அவசரமா இந்தக் கல்யாணம் அமைஞ்சிடுச்சு."

"கல்யாணத்துக்கப்புறம் வேலைக்குப் போகணுமா?"

"தப்பா?"

"தப்பில்லை. எல்லாரும் எங்கக் குடும்பத்தைத்தான் திட்டுவாங்க. என்னைப் பைத்தியம்னு சொல்வாங்க."

"ஏன்?"

"நம்ம கடையில இருநூத்து நாப்பது பேர் வேலை பார்க்கறாங்க, தெரியுமா? அப்படி இருக்கறப்போ நீ வேலைக்குப் போனா நல்லா இருக்குமா? அதுக்காக உன்னை வீட்லயே இருன்னு சொல்ல மாட்டேன். சமையலுக்கு, வேலைக்கு நிறைய ஆளுங்க இருக்காங்க. நீ ஒரு துரும்பைக்கூட எடுத்து வைக்க வேண்டியிருக்காது. நீ என்னோட நகைக்கடைக்கு தாராளமா வரலாம். பிஸினஸ் கத்துக்கோ. புதுசா என்ன செய்யலாம்னு யோசனை சொல்லு! சரியா?"

"ரொம்ப சந்தோஷம்! சரி, பால் ஆறிடும். என்ன வேணும், காபியா, டீயா?" என்றாள் மஞ்சரி.

"எதுவா இருந்தாலும் சரி" என்ற குமரன், அவள் உற்சாக நடை போட்டுச் சமையலறைக்குள் செல்வதைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான்.

கள்ளம் கபடம் இல்லாத அன்பான பெண்! இவளிடம் ஒரு மிகப் பெரிய உண்மையை மறைக்கிறேனே....நியாயமா? ஏற்கெனவே என் மனத்தில் ஒரு காதல் தவித்துக்கொண்டிருக்கிறது என்பதை அப்பட்டமாக மறைக்கிறேனே... இந்த நிமிடம்கூட என் மனம் இவளைப் பூஜாவோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றதே... இவள் கண்களைப் பார்க்கும்போது அவள் கண்கள் நினைவுக்கு வந்துத் தொலைக்கிறதே... இவள் உதடுகளைப் பார்க்கும்போது அவள் உதடுகள் நினைவுக்கு வருகிறதே... அந்த உதடுகளில் முத்தமிட்டதும் சேர்ந்து நினைவுக்கு வந்து என்னை அலைக்கழிக்கிறதே...

இவளிடம் மனப்பூர்வமாகப் பேசுவது போல நாடகமாகவே பேசிக் கொண்டிருக்கிறேனா? வாழ்நாள் முழுவதும் இந்த நாடகத்தைத் தொடரப் போகிறேனா? முடியுமா? அவஸ்தை இல்லையா?

காபியோடு வரும் மஞ்சரியையே பார்த்தான் குமரன். வெளிப்படையாகச் சொல்லி விட்டால்தான் என்ன?

(தொடரும்)

"நம்ம தலைவர் எதுக்குக் கோபமா இருக்காரு..?"

"'சிறந்த சிரிப்பு நடிகர்'னு விருது கொடுத்துட்டாங்களாம்!"

- தஞ்சை பா.து.பிரகாஷ்

## விக்டர் 

தாதாயிச படங்களுக்கு நடுவில் தந்தை - மகனுக்கான குடும்ப உறவை யதார்த்தமாகக் கொடுத்து அசத்தியிருக்கும் இயக்குநர் திருமுருகன், சீரியலிலிருந்து சினிமாவுக்கு நுழைந்தவர். "சீரியலும் சினிமாவும் என்னோட ரெண்டு கண்கள் மாதிரி. ரெண்டையும் ரொம்ப அழகா ரசிகர்களுக்கு கொடுத்துகிட்டே இருப்பேன்'' என்கிறார் திருமுருகன்.

இந்த அளவுக்கு படம் வெற்றி அடையும்னு நெனைச்சீங்களா?' என்றால் "என் நம்பிக்கை வீண் போகல. 'எம்-மகன்' படம் என்னோட நிஜ வாழ்க்கை. நான் ஒரு சரியான லெவலுக்கு வர்ற வரைக்கும் என் வீட்ல அனுபவிச்ச உண்மைகளைத்தான் உணர்வுபூர்வமா சொல்லியிருக்கேன். இன்னைக்கும் நிறைய குடும்பங்கள்ல அப்பனுக்கும் பிள்ளைக்கும் இடையில் நீண்ட 'கேப்' இருந்துக்கிட்டே தான் இருக்கு. அது மாறணும்'' என்று உணர்ச்சிவசப்படுகிறார்.

''சீரியலுக்கும் சினிமாவுக்கும் என்ன வித்தியாசத்தை உணர்ந்தீங்க?'

"ரெண்டுக்குமே திரைக்கதை ரொம்ப ரொம்ப முக்கியம். ஆனா பல வருஷங்கள் நடக்கிற சம்பவங்களை சில நிமிஷங்களுக்குள்ள சொல்லிடலாம்; சொல்லிடணும்'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே குறுக்கிட்டு, 'அதுக்காக ரெண்டு நிமிஷ பாட்டுலேயே பரத் பெரிய பணக்காரனாகிற மாதிரி விக்ரமன் ஸ்டைல்ல பண்ணியிருக்கீங்களே நியாயமா?' என்றால், பதட்டமில்லாமல்,

"சீரியலா இருந்திருந்தா ஒரு வேளை பரத் எப்படியெல்லாம் கஷ்டப்பட்டுப் பணக்காரராகறாரு, வடிவேல் எப்படி முன்னேறுறார்னு காண்பிச்சிருக்கலாம். ஆனா இது சினிமா. அந்தப் பாட்டுக்கு அப்புறம்தான் கதையே இருக்கு. அந்த நேரத்துல போய் அவர் எப்படி பணக்காரராகிறார்னு 'வழவழ'ன்னு இழுத்தா 'சீரியல் காரங்களே இப்படி இழுஇழுன்னு தான் இழுப்பாங்கய்யா'ன்னு சொல்வாங்களே..." என்று விளக்கம் கூறுகிறார்.

> " இன்னைக்கும் அப்பா பிள்ளைக்கிடையே கேப் இருந்துகிட்டுதான் இருக்கு! "

# "நிச்சயமா ஹீரோதான்..."

எல்லாப் படங்கள்லேயும் படத்தோட ஆரம்பத்திலேயே ஹீரோயினைக் காண்பிச்சுடுவாங்க. ஆனா உங்க படத்துல ரெண்டாவது பாதியில ஹீரோயினை காண்பிக்கிற அளவுக்கு தில் எப்படி வந்தது?'

''ஹீரோ ஆரம்பத்திலிருந்தே ஹீரோயின் எப்படியிருப்பா, அவளைப் பார்க்கணும், பேசணும்னு ஏக்கத்தோடயே இருப்பார். அதே ஏக்கம் ஆடியன்ஸுக்கும் இருக்கணும். ஹீரோ பார்த்து அந்த சந்தோஷத்தை அனுபவிக்கும்போது ரசிகர்களும் அதே சந்தோஷத்தை அனுபவிக்கணும்ங்கிறதுக்காகத் தான் அப்படிப் பண்ணினேன். அப்படி செகண்ட் ஆஃப்ல வந்தாலும் கோபிகா அசத்திட்டாங்க. அதே மாதிரி பரத், நாசர், சரண்யா எல்லாருமே என்னைவிட ரொம்ப ஆக்டிவா ஒர்க் பண்ணி கோ-ஆபரேட் பண்ணினாங்க. ஆனாலும் எனக்கு ஒரு பயம் இருந்துகிட்டே இருந்துச்சு. படம் ஓடலன்னா சீரியல் இயக்குநர்களுக்கு சினிமா இயக்கத் தெரியாதுன்னு முத்திரை குத்தி ஒதுக்கி வெச்சிருப்பாங்க. நல்லவேளை எனக்குப் பிறகு சினிமா இயக்க வரும் சீரியல் இயக்குநர்களுக்கு அந்த மாதிரி ஃபீலிங் இல்லாத அளவுக்கு படம் வெற்றி அடைஞ்சிடுச்சு'' என்று சந்தோஷப்பட்டவரிடம் 'அடுத்து என்ன ப்ராஜக்ட்? ''இன்னும் ஒரு மாசம் கேப். அதுக்கப்புறம் அடுத்த ப்ராஜக்ட் ஸ்டார்ட் பண்ணிடுவேன்; அப்ப சொல்றேன்'' என்கிறார். மெட்டி ஒலி நாயகன் நீங்க. பெரிய திரைல ஹீரோவாகற ஆசை உண்டா?' ''கண்டிப்பா. ஒரு நல்ல இயக்குநர்னு உங்க மத்தியில பேர் வாங்கிட்டு அதுக்கப்புறம் நிச்சயமா ஹீரோ தான்!''

- திருமுருகன்

படம் :
பொள்ளாச்சி சுந்தரம்

யுவராஜ் 

# இண்டிக்கு

இந்தியத் தொலைக்காட்சிகளில் முதல்முறையாக அந்த அதிசயம் நடந்தது. சன் டீ.வி.யும் ஜெயா டீ.வி.யும் ஒரு செய்தியை வரி மாறாமல் ஒரே மாதிரி ஒளிபரப்பிக்கொண்டிருந்தது. ஒட்டுமொத்த தமிழகமே தொலைக்காட்சி முன்பு குவிந்துவிட்டது.

இன்னாள் முதல்வர் கருணாநிதி, முன்னாள் முதல்வர் ஜெயலலிதாவைத் தனது மூத்த மகளாகத் தத்தெடுத்துக் கொள்ளும், வரலாற்றுச் சிறப்பு மிக்க காட்சி ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தது. முதலில் கலைஞர் பேசினார்.

''நாம் காண்பது கனவா? நிஜமா? என்று பலருக்கும் ஆச்சர்யமாக இருக்கும். ஆனால், தமிழக அரசியல் வரலாற்றைப் புரட்டினால் இதைவிட வியப்பான சம்பவங்கள் நடந்துள்ளன. ஜெயலலிதா மீது எனக்கு தனிப்பட்ட முறையில் எந்த விரோதமும் இல்லை. அவரது அரசியல் வழிமுறைகளைத்தான் எதிர்த்தேன். பெண்களிடம் பாசமும் மதிப்பும் கொண்ட இனம் தமிழ் இனம். நாம் பெண்களை எந்த அளவுக்கு மதித்தோம் என்பதற்கு சங்க கால ஔவையார் முதல் சாஃப்ட்வேர் காலத்துக் குமரிகள் வரை அடுக்கிக் கொண்டே போகலாம். கவிதைக்குக் கனிமொழியைத் தந்தாய். அரசியலில் உன் சார்பாக யாரைத் தந்தாய் என்றொரு கேள்வி எனக்குள் எழுந்தது.

ஜெயலலிதாவைத் தவிர வேறு யார் அந்த இடத்துக்குப் பொருத்தமாக இருப்பார்கள்? ஆகவேதான் அவரை எனது மூத்த மகளாகத் தத்தெடுத்துக் கொண்டேன். மிச்சத்தை, என் மகளே உரைப்பாள்'' என்றார்.

காமெடி




கூட்டத்தை வணங்கிய ஜெயலலிதா சில நொடிகள் அமைதியாக இருந்தார். பிறகு ''எனக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை. கலையுலகம் மூலம் தமிழக மக்கள் முதலில் என்னை மகளாக ஏற்றார்கள். புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். எனக்கு அரசியல் நடை வண்டியைக் கொடுத்து நடக்கப் பழக்கினார். தமிழக மக்கள் என்னைச் சிம்மாசனத்தில் அமர வைத்தார்கள். ஆனாலும், என் மனத்தில் ஒரு குறை இருந்துகொண்டே இருந்தது. சிம்மாசனத்தை விட்டு வீடு திரும்புகையில் வரவேற்று உபசரிக்க தாய், தந்தை இல்லையே என நினைத்தேன். இப்போது அது தீர்ந்தது. இனி தந்தை வழியே என் வழி. இந்த உறவுக்குப் பாலமாக இருந்த வைகோவுக்கு என் நன்றி!'' என்றார்.

அடக்கமாகக் கைகளைக் கட்டியபடி நின்றிருந்த வைகோவின் பக்கம் கேமராக்கள் திரும்பின. அவர் உதடுகள் புன்னகைத்தன.

''தேர்தலின்போது நான் திமுகவிலிருந்து அதிமுகவுக்குச் சென்றபோது எல்லோரும் கடுமையாக விமர்சித்தார்கள். நான் அப்படிச் சென்றதே இப்படியொரு உறவை உண்டாகத்

தான். இது கலைஞருக்கும் தெரியும்; தயாநிதி மாறனுக்கும் தெரியும். நாங்கள் மேடையில் திட்டிக்கொண்டதெல்லாம் சும்மா 'உலுஉலுலாய்'. ஒண்டிக்கு ஒண்டி வர்றியா என்றதன் அர்த்தம் ஒண்டியாக இருக்கும் ஜெயலலிதாவை மகளாக அழைத்து வா என்பது தான். கலைஞர் இட்டப் பணியைச் செய்துவிட்டேன்'' என்று கூறியவர் பொலபொல'வென கண்ணீர்விட, கருணாநிதி ஆறுதலாகத் தழுவிக் கொண்டார்.

காலைச் செய்தியில் இந்த பரபரப்பு நடந்துகொண்டிருக்க, மாலை வெளியான செய்தித்தாள்களில் தேமுதிக தலைவர் விஜயகாந்த் ஆவேசமாகப் பேட்டியளித்தார்.

"எலியும் பூனையுமா இருந்த ரெண்டு பேரும் சேர்ந்ததே பயத்தால்தான். வருகிற உள்ளாட்சித் தேர்தலிலும் அடுத்த சட்டமன்றத் தேர்தலிலும் தே.மு.தி.க. மிகப் பெரிய வெற்றி பெறும் என்றும் இதைத் தடுக்க வேண்டுமென்றால் இரு கட்சி

# ஒண்டியா...

களும் கூட்டணி அமைக்க வேண்டுமென்றும் ரகசியச் செய்தி கலைஞருக்குச் சென்றது. அதனால்தான் இந்த 'தத்து' நாடகம். ஆனால் இவர்களின் திட்டம் பலிக்காது. இந்த இரு கட்சிகளுடன் ஜார்ஜ்புஷ்ஷின் கட்சியும் கூட்டணி வைத்தால்கூட நாங்கள்தான் ஜெயிப்போம். இது உறுதி!'' என்றார்.

அதேசமயம் வெள்ளை மாளிகையிலிருந்து தமிழக அரசுக்கு ஒரு ஃபேக்ஸ் வந்தது. ஜார்ஜ்புஷ் இரு கட்சிகளையும் வாழ்த்தி அனுப்பிய செய்தியில்...

"இது இந்திய மக்களை மட்டுமின்றி உலக மக்களையே மகிழ்ச்சியில் ஆழ்த்தியுள்ளது. இரு கட்சிகளின் தொண்டர்களையும் ஒன்றிணைத்து அமெரிக்க ராணுவப் பயிற்சி அளிக்கப்படும். பின்லேடனைப் பிடிப்பதற்கு அவர்களைப் பயன்படுத்தலாம். இது குறித்துப் பேச சீக்கிரமே தமிழ்நாடு வருகிறேன். அப்படியே மெரீனா பீச், சிவாஜி சிலையைப் பார்வையிடுகிறேன். இட்லி, தோசை எல்லாம் தயாராகட்டும்' என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

இந்தப் பரபரப்பெல்லாம் அடங்கி, வழக்கமான சீரியல்களைப் பார்க்க முடியாமல்போன கவலையோடு மக்கள் உறக்கத்துக்குப் போன நள்ளிரவு ஒரு மணிக்கு, 'தினப்புளுகு' அலுவலகத்துக்கு ஒரு தொலைபேசி வந்தது...

''நான் சுப்பிரமணியசுவாமி பேசறேன். நடந்து இருக்குற எல்லாமே நாடகம். ரெண்டு பேரும் சேர்ந்ததுக்குப் பின்னாடி ஒரு பயங்கர ரகசியம் இருக்கு. ஆனா அது விஜயகாந்த் சொன்ன காரணமில்லே. வேற விஷயம். ஆதாரங்களும் என்கிட்டே இருக்கு. அதைக் கூடிய சீக்கிரத்துல வெளியிடறேன்''

டொக்!



## பி.மாரிமுத்து

சிறுகதை

**ரா**கவன் கையில் ரேஷனில் வாங்கிய அரிசிப் பையோடு அந்த ஒண்டிக்குடித்தன போர்ஷனுக்குள் நுழைந்தான். மண்ணெண்ணெய் ஸ்டவ்வில் உலை கொதித்துக் கொண்டிருந்தது. அரிசிப் பையை அவசரமாக வாங்கினாள் உமா. அரிசியைக் களைய ஆரம்பித்தாள். அவள் உடம்பில் மூக்குத்தியைத் தவிர வேறு தங்கம் எதுவும் இல்லை.

ராகவன் அவளைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான். ம்! எல்லாம் விதி! என்று நினைத்துக்கொண்டான். எவ்வளவு நகைகள் போட்டுக் கொண்டு வந்தாள்!

ராகவனுக்குச் சொந்த ஊர் தென்காசி. அங்கு ராகவன் ஏலச்சீட்டு நடத்திக் கொண்டிருந்தான். சீட்டு நடத்துவது என்பது கத்திமேல் நடப்பதை விட கடினமானது என்பதை ராகவன் உணரும் போது, இரண்டு மூன்று பேர் சீட்டை எடுத்துக்கொண்டு பணம் கட்டாமல் ஓடிப் போயிருந்தார்கள்.

இரண்டு லட்ச ரூபாய்க்கு மேல் கடனானது. வேறு வழியில்லாமல் உமாவின் நகைகள், வயல்காடு எல்லாவற்றையும் விற்றுதான் கடனை அடைத்தான்.

அதற்குப் பிறகு, அந்த ஊரில் இருக்க ராகவனுக்கு மனமும் இல்லை. வருமானத்துக்கு வழியும் இல்லை. வேலை தேடிச் சென்னைக்கு உமாவுடன் வந்து நான்கு மாதங்களாகிவிட்டன.

ராகவனின் படிப்புக்கும் அனுபவத்துக்கும் செக்யூரிட்டி உத்தியோகம்தான் கிடைத்தது. அதில் வரும் வருமானத்தில் வாடகை கொடுத்து மாத சாப்பாட்டுக்கு வழி பண்ணுவதற்குள் விழி பிதுங்கியது. இவ்வளவுக்கும் ரேஷன் அரிசிதான்.

உமா சமையலை முடித்திருந்தாள்.

"வாங்க சாப்பிடலாம்" என்று தட்டு எடுத்து வைத்தாள். கை, கால் கழுவி விட்டுச் சாப்பிட உட்கார்ந்தான். தட்டில் சாதம் போட்டுக் குழம்பு ஊற்றினாள்.

"தம்பி! ஊரிலிருந்து உங்களுக்கு போன்!" என்று வீட்டு ஓனர் வந்து சொல்ல, அவசரமாக எழுந்தான்.

"நீங்க சாப்பிடுங்க, நான் பேசிட்டு வர்றேன்!" என்று அவனை இருத்திவிட்டு உமா போனாள்.

'யாராய் இருக்கும். மளிகைக் கடை பாய்க்கு ஒரு ஐந்நூறு ரூபாய் பாக்கி குடுக்காமல் வந்துவிட்டோம். அவராய் இருக்குமோ... இல்லை, ஒன்றிரண்டு பேருக்கு சீட்டுப் பணம் பாக்கி குடுக்கவில்லை. அவர்களாய் இருக்குமோ' என்று குழம்பிக் கொண்டிருந்தான்.

"என்ன, நீங்க இன்னும் சாப்பிடாம



இருக்கீங்க!" என்றபடி வந்தாள்.

"அது இருக்கட்டும்; மொதல்ல போன்ல யாருன்னு சொல்லு!"

"உங்க தம்பி!"

"என்னவாம்?"

"உங்க சித்தப்பா வேலை விஷயமா நாளைக்கு மெட்ராஸ் வர்றாராம்!"

"போச்சு! சித்தப்பா வர்ற நேரத்துல பாக்கெட்டுல பத்து ரூபா கூட இல்லியே!"



# விருந்தோம்பல்

என்று தலையைப் பிடிந்துக் கொண்டான்.

"எதுக்குங்க காசு?" என்றாள் அப்பாவியாக.

"நம்ம தலையெழுத்து நாம ரேஷன் அரிசி சாப்பிடறோம். அவருக்கு அதையா போட முடியும். ஒரு வேளையாவது நல்ல சாப்பாடு போட வேணாமா? நம்மளப் பத்தி என்ன நினைப்பாரு!" என்று கவலைப்பட ஆரம்பித்தான்.

மூக்குத்தியைக் கழட்டி அவன் கையில் குடுத்தாள். "உமா!" என்றான் அதிர்ச்சியுடன்.

"பரவால்ல... இத அடகு வச்சுட்டு வாங்க... அப்புறம் காசு வந்தவுடனே மீட்டுக்கலாம்!" என்றாள்.

மறுநாள். உமாவின் மூக்குத்தி அப்பளம், பொரியல், கூட்டு, ரசம், சாம்பாராக மாறியிருந்தது.

சித்தப்பா வந்தார். அவரை வாசலில் போய் வரவேற்றான். வீட்டுக்குள் வந்தவர், "என்னடே, எலிப் பொந்து கணக்கா இருக்கு வீடு!" என்று கிண்டலடித்தார்.

இலை போட்டு, உணவு பரிமாறப்பட, ருசித்துச் சாப்பிட்டார். பன்னீர் புகையிலையுடன், வெற்றிலை பாக்கு தயாராக வாங்கி வைத்திருந்தான். அதை கொடுத்தான். அதையும் போட்டு முடித்து ஊருக்குக் கிளம்பினார்.

ஆட்டோவில் ஏறும் முன் சித்தப்பா, ராகவன் தோளைத் தட்டியபடி,

"வரட்டுமாடே?" என்றார்.

"சரி சித்தப்பா!"

"அப்புறம் ஒரு விசயம். இன்னும் நீ திருந்தவேயில்ல... இம்புட்டுக் கஷ்டத்துலயும், இப்படி வடிச்சுக் கொட்டி வகைவகையா கறி வச்சுத் தின்னா எப்படிடே உருப்புடுவே! நாக்க அடக்கி பழகிக்கோடே! தினமும் இப்படித் தின்னா எப்படி முன்னேற முடியும்? கடன்தான் ஆகும், வரட்டுமா?" என்று ஆட்டோவில் ஏறிப் போனார்.

விக்கித்துப் போனான் ராகவன்.



''இடைவேளைக்குப் பிறகு ஸ்கிரீனை டைட்டா இழுத்து கட்டுறாங்களே...ஏன்?''

''பாதிக்குப் பிறகு படம் தொய்வா இருக்குனு விமர்சனம் வந்துச்சாம்!''

- தா.முகமது இக்பால்



''மன்னா! இளவரசரோட இம்சை தாங்கலை...''

''ஏன் அமைச்சரே?''

''குருகுலத்தை 'கோ-எஜுகேஷன்' ஆக்கணுமாம்!''

- தஞ்சை தாமு

# அஞ்சனாவா...



''எனக்கு நியூமராலஜியிலே நம்பிக்கை அதிகம்...''

''சரி...அதுக்காக 'அஞ்சனா'ங்கிற உங்க பேரை 'எட்டனா'னு மாத்துனது டூமச்...''

- தஞ்சை தாமு

# எட்டணாவா?



"நீ தலையெடுத்துதான் நம்ம குடும்பத்தைக் காப்பாத்தனும்!"

"சொல்லுப்பா... யார் தலையை எடுக்கணும்?"

- ஞா.ஞானமுத்து



"கவலைப்படாதே சுபாலி! நான் சட்டத்தைக் கரைச்சுக் குடிச்சவன்!"

"நீங்க எந்தக் கடையில வாங்கிக் குடிச்சீங்கன்னு சொன்னா அதே கடையில நானும் வாங்கிக் குடிக்கிறேன் சாமி!"

- சி. பரத்



"நாலு வருஷத்துக்கு முன்பு வங்கியில் கொள்ளையடிச்ச பத்து லட்சத்தை என்ன செய்தே?"

"விக்கிற விலைவாசிக்கு நாலு வருஷமாகியும் இன்னுமா எஜமான் மிச்சமிருக்கும்?"

- உ. ராஜாஜி

## லஜ்ஜாவதி 



# சில்லுனு ஒரு காதல்

**விமர்சனம்**

அன்பான புருஷன், அழகான (வாயாடி) பொண்ணுன்னு ஜோதிகாவோட குடும்ப வாழ்க்கை சில்லுனு போய்ட்டிருக்கு. புருஷன் ஊர்ல இல்லாத சமயத்துல தற்செயலா அவனோட பழைய டைரியைப் புரட்ட, அதுல பகீர்னு ஒரு காதல் கதை கிராஸ் ஆகுது. அப்புறம் என்னாங்கறதுதான் மிச்சக் கதை.

சூர்யாவோட நடிப்பும் அழகும் கூடிட்டே போகுது. ஒரு காட்சியில மூணு கல்லூரிப் பொண்ணுங்க சூர்யாவை 'சைட்' அடிக்கறதும் ஒருத்தி ஐ லவ் யூ சொல்றதும் அந்தக் கும்பல்கிட்டேயிருந்து புருஷனை மீட்க ஜோதிகா பதர்றதும் நல்ல கலகலப்பு. நிஜத்திலும் இதே உஷாரோடு இருந்துக்கங்க, அம்மணி.

கணவன் - மனைவி நெருக்கத்தைக் கவிதையா கையாண்டு இருக்காங்க. ஆனா பிற்பாதியில வர்ற கல்லூரிக் காதல்ல அது இல்லை. ரௌடியா கல்லூரியையே கலக்கற சூர்யா மேல, பூமிகாவுக்குக் காதல் வர்றதுக்கான காரணம் சொல்லப்படலை. பூமிகா தன்னோட காதலை வெளிப்படுத்தற காட்சியும், அப்போ பேசற வசனமும் மகா அபத்தம்.

அடக்கமான கல்லூரி மாணவி பூமிகாவைவிட, ஆஸ்திரேலியா ரிட்டன் பூமிகாவோட நடிப்புல இயற்கை இருக்கு. வடிவேலுவை ஊறுகாயாக்கிட்டாங்கப்பு. பி.சி. ஆடியன்ஸைக் கவர் பண்ண பின்னாடி கோத்து இருப்பாங்களோ! கதையோட ஒட்டலை.

பாடல்களில் நொடிக்கு நொடி மாறுகிற காட்சிகள் அழகு. ஒளிப்பதிவாளரையும் எடிட்டரையும் கண்டிப்பா பாராட்டணும். இனிமே ஏ.ஆர்.ரஹ்மான்கிட்டே நிறைய எதிர்பார்க்காம இருந்தா ஏமாற்றம் பெருசா தெரியாது. அதேபோலதான் படத்தையும் ரொம்ப எதிர்பார்க்காம பார்த்தோம்னா, ரசிக்கலாம்.

## கு.ஞானசம்பந்தன் 

# என்னைக் குறிவைத்த கலைஞர்..!

தடுமாறினாலும் நான் தளர்ந்துவிட வில்லை. சமாளித்து வார்த்தைக்கு வார்த்தை சரவெடிபோல் நகைச்சுவை யுடன் இலக்கியங்களில் இருந்து சுவை யான செய்திகளை அள்ளி வீச, அரங்கம் மகிழ்ச்சியில் துள்ளியது.

'தாமதமாக வருகின்ற மாணவர்களை, ஆசிரியர்கள் 'ஏன் லேட்டாக வந்தாய்?' என்று கேட்டால்,

'லேட் ஆயிருச்சு சார்' என்பார்கள்.

'ஏன் லேட்டாயிருச்சு?' என்றால், அதற்கொரு காரணம் சொல்லுவார்கள். இப்படித்தான் நான் கல்லூரியில் படிக்கும்போது, லேட்டாக வந்த பையன் ஒருவனை எங்கள் கோபக்கார ஆசிரியர், 'ஏன் லேட்டு? எங்க போனே?' என்று எரிச்சலோடு கேட்க, அந்தப் பையன் மிக அமைதியாக, 'பிரின்ஸிபாலைப் பார்த்துட்டு வர்றேன்' என்றான். இதைக் கேட்ட ஆசிரியர் சற்றே அதிர்ந்து போய், 'சரி போய் உட்கார்' என்று கூற, என்னருகில் உட்கார்ந்த அந்தப் பையனை, 'பிரின்ஸிபாலை எங்க பார்த்தே?' என்று நான் ஆர்வமாய்க் கேட்க, 'சும்மா ஜன்னல் வழியாப் பார்த்தேன்' என்று ரகசியமாய்ச் சொன்னான் என்று நான் பேசிக் கொண்டு வரவே, கூட்டம் ஆனந்தமாய்க் கேட்டுக் கொண்டிருந்தது. எனது பேச்சைக் கேட்டுக் கொண்டும், கூட்டத்தினரின் மகிழ்ச்சியைப் பார்த்துக் கொண்டுமிருந்த கலைஞர் அவர்கள், மிகுந்த ஆரவாரத்துக்கிடையே தமது அற்புதமான சொற்பொழிவைத் தொடங்கினார்.

தம் பேச்சுக்கிடையில், "இந்தக்

38

சிரிமாவுக்குப் போகலாம் வாங்க!





கூட்டத்தில் முதலில் பேசிய நமது மதுரை ஞானசம்பந்தனின் பேச்சைக் கேட்டேன். சிந்தனைச் சிற்பி சி.பி.சிற்றரசின் மேடைப் பேச்சின்போதுதான் அரங்கில் நிமிடத்துக்கு ஒருமுறை கைத்தட்டல் கேட்டுக்கொண்டேயிருக்கும். அத்தகைய ஒரு வரவேற்பை நண்பர் ஞானசம்பந்தன் பேசும்போது பார்த்தேன்; மகிழ்ந்தேன். இவரைப் போன்றவர்கள் நம் இயக்கத்தில் இருந்தால்......'' என்று நிறுத்திச் சிறிது இடைவெளிவிட்டு 'தமிழிலக்கியத்தில்' என்று சொல்லி, "இவர் தமிழ் இயக்கத்துக்குக் கிடைத்த சிற்றரசு'' என்று என்னைக் குறிவைத்துப் பாராட்டினார் அப்பெருமகனார். சபையில் கைதட்டல்!

எனக்கு அப்போது என் தாய், தந்தையரின் நினைவு 'சட்'டென்று வந்து போனது. கலைஞரின் பாராட்டு வார்த்தைகளை அவர்கள் கேட்டிருக்க வேண்டுமே என என் உள்மனம் ஏங்கியது.

'கோகலே' அரங்கில் தம் பேச்சை நிறைவுசெய்யும் முன்னர், தாம் 'மனோகரா' படத்துக்காக எழுதிய 'தர்பார்' வசனத்தை ஏற்ற இறக்கங்களோடு கலைஞர் பேசிக் காண்பிக்க, அத்தனைபேரும் வியந்து போனோம். அந்த வசனத்தை நடிகர் திலகம் பேசியே கேட்டுப் பழக்கப்பட்டிருந்த எனக்கு, கலைஞரின் உச்சரிப்பும் பாவனையும் புதிய கோணத்தைப் படம்பிடித்துக் காட்டின. படைத்தவரே பாத்திரமாக மாறும்போது அந்தப் பரிமாணம் அலாதியானதுதான்.

இந்நிகழ்ச்சிக்குப் பின்னர், கவிப்பேரரசு வைரமுத்துவின் 'வைரமுத்து கவிதைகள்', 'கள்ளிக்காட்டு இதிகாசம்' நூல்கள் வெளியீட்டு விழாக்களிலும் கலைஞரோடு ஒரே மேடையில் இருந்து உரையாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்படி நான் உரையாற்றும்போதெல்லாம் கலைஞரின் முகத்தில் மகிழ்ச்சியும் குறுஞ்சிரிப்பும் இழையோடுவதைக் கண்டிருக்கிறேன்.

சினிமாமணியும் முத்துராக்கும் நானும் இராமதுரை வீட்டில் பேசிக்கொண்டிருந்துவிட்டுக் கிளம்பும்போது, பல அரிய, பழைய திரைப்படப் பாடல் புத்தகங்களையும், வசன நோட்டுகளையும் அவர் எங்களுக்குத் தந்து வழியனுப்பினார்.

அந்தக் காலச் சினிமாப் பாட்டுப் புத்தகங்கள் அனைத்தும் வரலாற்று ஆவணங்கள் போல எனக்குத் தோன்றின. வட்ட வடிவிலான எல்.பி. ரிகார்டு (இந்தக்கால சி.டி. போல) மாதிரியே அச்சிடப்பட்ட 'அன்பே வா' பாட்டுப் புத்தகம், சீட்டுக்கட்டு வடிவில் அமைந்த பாலாஜியின் 'தங்கை' படப்பாட்டுப் புத்தகம் என்று பார்க்கப் பார்க்க பரவசமடைந்தேன். அவற்றில் காணப்பட்ட கதைச் சுருக்கங்களையும் 'விடை வெள்ளித்திரையில் காண்க...' போன்ற ஆவலைத் தூண்டும் வாசகங்களையும் இப்போது எங்கும் காண முடியாது.

"தம்பி, இந்த ஐயா சில படங்களுக்குக் கூட ஃபைனான்ஸ் செய்திருக்காருன்னு சொல்றாங்க. ஒண்ணும் திரும்பக் கிடைக்கல. ஆனா ரசனையான மனுஷன். இந்தத் தென்னந்தோப்பு இருக்குது பாருங்க, இது அந்தக் காலத்தில் பெரிய புல்வெளி மைதானமா இருந்துச்சு. அப்ப அதுல ஒரு நிரந்தர மேடைபோட்டு, கோடை காலத்தில் நாடகம், நாட்டியம், வில்லுப்பாட்டு எல்லாம் சொந்தச் செலவுல ஏற்பாடு பண்ணி, ஆயிரக்கணக்கான மக்கள் பார்க்கிற மாதிரி வசதி செய்வாரு. ஒரு தடவை லலிதா, பத்மினி, ராகினி டான்ஸ் கச்சேரி நடந்துச்சு. எட்டூருசனம் கடலாத் திரண்டு வந்திருச்சு. நானும், இன்னும் நாலுபேரும் மேடைக்குத் தள்ளி இருந்த



எம்-மகன் ஹிட்டானதில் கோபிகாவுக்கு ஏக குஷி. இடைவேளைக்குப் பிறகு வந்தாலும் தம் கேரக்டர் பேசப்பட்டதில் புல்லரித்துப் போயிருக்கிறார். விளைவு, யார் கால்ஷீட் கேட்டாலும், 'கதை என்னைச் சுத்தி வருதா?' என்று கண்டிஷன் போடுகிறார்.

தென்னை மரத்தில் விடிய விடிய, பிடிச்ச பிடிய விடாம டான்ஸ் பார்த்தோம்'' என்று பெருமிதம் சொன்னார் முத்து ராக்கு.

''எம்.கே.டி.பாகவதர், கலைவாணர், குலதெய்வம் ராஜகோபால் எல்லாரும் கூட வந்திருக்காங்களாமே, எங்க வீட்டுப் பழைய பெட்டியில விளம்பர நோட்டீஸ் பார்த்தேன்'' என்றான் சினிமாமணி.

''ஆமா தம்பி, குலதெய்வம் ராஜகோபால் வில்லுப்பாட்டு பாடுறப்ப ஒரு கதை சொன்னாரு. ஒரு ஊர்ல முயலும் ஆமையும் இருந்துச்சாம். ரெண்டும் ஒருநாள் ஓட்டப்பந்தயம் வச்சுச்சாம்... எது ஜெயிச்சது தெரியுமா?'' முத்துராக்கு என்னிடம் கேட்டார்.

''இந்தக் கதை எனக்குத் தெரியாதா? ஆமைதான் ஜெயிச்சது. முயல் தூங்கித் தோத்தது'' என்றேன் நான்.

''தம்பி, விடை சரிதான். ஆனா, இத இப்படிச் சொல்லாம குலதெய்வம் ராஜகோபால் எப்படிச் சொன்னார் தெரியுமா? 'முயலும் ஆமையும் ஓட்டப் பந்தயத்தில் போட்டி போட்டன. முயல் ஆமையால் தோற்றது என்றார்'' என்று முத்தராக்கு சொன்னவுடன்,

''நானும் அதத்தான் சொன்னேன்'' என்றேன், புரியாமல்.

''இல்லைடா, அவரு சொன்னதை நல்லாக் கவனிச்சுக் கேளு. 'முயல் ஆமையால் தோற்றது - 'முயலாமையால்' தோற்றது. 'முயலாமை' என்பது முயற்சி செய்யாமை என்று அர்த்தம்டா'' என்று சினிமாமணி சிறப்பாக விளக்கிச் சொன்னான்.

''அதுமட்டுமில்ல தம்பி, இதை அவரு சொல்லிட்டு, 'இந்தக் கதைக்குச் சொந்தக்காரன் நான் இல்ல, எங்களைப் போன்ற காமெடி நடிகர்களை எல்லாம் வாழ வைத்த தெய்வமான கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் அவர்கள் சொன்ன கதை' என்று சொல்லி தம் குருநாதருக்குப் பெருமை சேர்த்தார் குலதெய்வம் ராஜ கோபால்'' என்று அழகாகச் சொன்னார் முத்துராக்கு.

''அது சரி, ராஜகோபால்தானே அவருபேரு. 'குலதெய்வம்' யாரு?'' என்று நான் கேட்டேன்.

(ரீல் சுற்றும்)

சுதா சேஷய்யன் 

மந்திரபூர்வமான ரகசியங்கள் என்று நம் பெரியோர்கள் பலவற்றைச் சொன்னதற்கு ஒரே ஒரு காரணம்தான். ரொம்பப் பெரிய விஷயத்தை உயர்ந்த விஷயத்தை – ஆழ்ந்த ஆர்வமும் அக்கறையும் இல்லாதவர்களிடத்தில் சொன்னால் அது நீர்த்துப் போய்தான் அவர்களுக்குப் புலப்படும், அல்லது புரியும். எட்டாம் வகுப்பு பிஸிக்ஸ் பாடத்தைத்தான் எட்டாம் வகுப்புக்குச் சொல்ல வேண்டுமேயொழிய, ரொம்ப பெரிய வகுப்புக்கு உரிய பாடத்தை அங்கே போய் விளக்கக்கூடாது. அது அவர்களுக்குப் புரிய வேண்டும் என்பதற்காக ரொம்ப எளிமைப்படுத்தினால் பாடத்தின் போனால், என்ன நடக்கும்...? "இது இல்லையே ஐன்ஸ்டீன் சொன்னது" என்று அவர்கள் ஒதுக்கி விடுவார்கள்!

இதே காரணத்துக்காகத்தான் மந்திர பூர்வமான விஷயங்களையும் எல்லா சமயங்களிலும் எல்லாரும் விவாதிக்கக் கூடாது என்று நம்முடைய மகனீயர்கள் சொல்லி வைத்தார்கள்.

ஹயக்ரீவரும் அகஸ்தியரிடம் அதே காரணத்தைத்தான் சொல்கிறார்: "இது ரகசியம். ஆர்வத்துடன் நீர் கேட்டதால் சொன்னேன். இல்லாவிட்டால் சொல்லியிருக்கமாட்டேன்'' என்றார்.



மந்திரபூர்வமானது என்றாலும் கூட, ஒவ்வொரு நாமாவளியும் அதற்குரிய மந்திரத்தை நமக்குக் காட்டக்

# அம்பிகை ஆட்கொண்ட பாஸ்கரராயர்

ஸாரம் நீர்த்துப் போய்விடும். ஐன்ஸ்டீன் தியரியை ஏழாம் வகுப்புக்குக் கற்றுத்தர முயற்சி செய்தால் அது ரொம்ப நீர்த்துப் போன வடிவமாகத்தான் அமையும். ஐன்ஸ்டீனே மேடையில் ஏறி தமது தியரியை விளக்கிச் சொல்ல முயன்ற போது, அவரால் முடியவில்லை! ''என்ன என்பது தெரியுமே தவிர, அதைச் சரியாகச் சொல்லத் தெரியவில்லை'' என்று சொல்லிவிட்டார் அவர்! ஆனால் பெர்ட்ரன்ட் ரஸ்ஸல் அதற்கு மிக எளிமையாக, தெளிவாக ஒரு வியாக்யானம் கொடுத்தார். ரஸ்ஸலின் இந்த விளக்கத்தை, ரொம்ப விஷயம் தெரிந்தவர்களிடம் சொல்லப் கூடியது என்றாலும்கூட, இந்த நாமாவளிகளை அவற்றின் மந்திர அர்த்தம் தெரியாமலே வெறுமே சொன்னாலும், அதற்குரிய பயனை அவை நிச்சயமாகத் தரக் கூடியவைதான்.

ஸ்ரீ லலிதா – 2

ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமாவளிகளுள் நடைமுறை வாழ்க்கையில் பொருத்திப் பார்க்க முடிந்தவற்றையெல்லாம் சேர்த்து நாம் இந்தத் தொடரில் சிந்திப்போம்.

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்துக்கு பாஸ்கர ராயர்தான் மிகப் பெரிய வியாக்யானம் (விளக்க உரை) கொடுத்தார். தமிழகப் பகுதிகளில் பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர் பாஸ்கர ராயர். அதனால்தான் பாஸ்கர ராஜபுரம் - பாஸ்கர ராயபுரம் என்று இப்போதுகூட தஞ்சாவூர்ப் பிரதேசத்தில் அவர் வாழ்ந்த

இடம் விளங்குகிறது.

அவருக்கு ஒரு குரு. வாஜபேய யக்ஞம் செய்ததால் வாஜபேயர் என்ற பெயர் அவருக்கு. அந்த குரு காவிரிக் கரையில் வந்து தங்கினார் என்பதால் தானும் காவிரிக்கரையில் வந்து தங்கினார் பாஸ்கர ராயர். அவர் எந்த அளவுக்கு ஸ்ரீ வித்யா உபாஸகர் என்றால், தாம் ஸ்ரீவித்யா உபதேசம் பெற்ற பிறகு, தமது மனைவி ஆனந்திக்கும் ஸ்ரீவித்யா உபதேசம் செய்து, அந்தப் பெண்ணையும் உபாஸகராக மாற்றினார்.

(ஸ்ரீ வித்யா உபாஸனை என்பது அம்பாளை ஸ்ரீ சக்ர வடிவில் சூக்ஷ்மமாக இருத்தி, பல நிலைகளில் மந்திர உச்சரிப்பின் மூலமும் விசேஷ தியானம் மூலமும் வழிபடுவது)

மஹாராஷ்டிரத்தில் பிறந்த பாஸ்கர ராயர், பல மொழிகளை அறிந்தவர். அவரைப் பற்றிக் கர்ண பரம்பரையாகப் பல செய்திகள் உண்டு.

ஒரு சமயம், திருவிடைமருதூரில் தங்கியிருக்கிறார் பாஸ்கரராயர்.

எப்போதுமே பெரிய மகான்களாக இருக்கக்கூடியவர்களைக் குறித்துப் பொறாமைப் படக்கூடியவர்கள் அவதூறு எழுப்புவார்கள் சமூகத்தில். பாஸ்கர ராயரைக்கண்டு பொறாமை கொண்டவர்கள், ஒரு கூட்டமாகச் சேர்ந்துகொண்டார்கள். அவரைப் பற்றித் தவறாகப் பேச ஆரம்பித்தார்கள். அவரிடத்தில் அனாவசிய வாக்குவாதத்துக்கு வரலானார்கள். வேண்டாத சந்தேகங்களைக் கிளப்ப ஆரம்பித்தார்கள்.

அந்தச் சந்தேகங்களையெல்லாம் கேட்டு, பொறுமையோடு அவர்களுக்குப் பதில் சொல்கிறார் பாஸ்கரராயர். என்னதான் அவதூறு சொன்னாலும் சொல்லட்டும், பரவாயில்லை என்று இருக்கிறார். அடுத்தவர்கள் தம்மைப் பற்றி என்ன சொன்னாலும் என்ன அவதூறு பேசினாலும் அப்படி உறுதியோடு இருப்பவர்கள்தான் சான்றாண்மை மிக்கவர்கள்.

*கொல்லா நலத்தது நோன்மை - பிறர்தீமை*
*சொல்லா நலத்தது சால்பு*

என்பது குறள். பிறர் சொன்ன தீங்கை வாயால் கூட சொல்லமாட்டார்கள் என்றால், அப்படிப்பட்ட சான்றாண்மை மிக்கவர் பாஸ்கரராயர்.

## குங்குமானந்தர்

வாக்குவாதம் நடந்து கொண்டேயிருக்கிறது. இவரும் பொறுமையாகப் பதில் சொல்கிறார்.

அப்படிச் சொல்லிக்கொண்டே வருகிறபோது, அந்தப் பகுதியில் இருந்த ஒருவர் - குங்குமானந்த சுவாமி என்று பெயர் அவருக்கு. ஏன் அந்தப் பெயர் என்றால், அவர் ஒரு பெரிய வித்யா உபாஸகர். எவ்வளவு பெரிய உபாஸகர் என்றால், திருநீற்றை எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டு அவர் ஸ்ரீவித்யா உபாஸனை செய்யும்போது, அந்தத் திருநீறு குங்குமமாக மாறுமாம்! ஆகவேதான் அவருடைய பெயரே குங்குமானந்த சுவாமி என்று ஆகிவிட்டது!

- அந்தக் குங்குமானந்த சுவாமி என்ன பண்ணுகிறார் என்றால், "பாஸ்கரராயர் எவ்வளவு உயர்ந்தவர், பெரியவர் என்பது உங்களுக்குத் தெரியாது. அது தெரியாமல் நீங்கள் அவரிடத்தில் உரசிப் பார்க்கிறீர்கள்" என்று எச்சரிக்கிறார்.

அங்கிருந்த பண்டிதர்கள் நிறைய படித்தவர்கள்- நிறைய படித்ததாக நினைத்துக் கொண்டிருந்தவர்கள்! இரண்டுக்கும் நிறைய வித்தியாசம் உண்டு! படித்தவர்கள் எல்லோருமே அறிவு நிறைந்தவர்களாக இருக்க வேண்டும் என்று அவசியமில்லை!



## அறிவும் ஞானமும்

எழுத்து எழுதுவதற்குத் தெரிந்தால் அதற்குப் பெயர் கல்வி என்று நினைக்கிறோம். அப்படி அல்ல அது. வெறுமே எழுத்து எழுதத் தெரிந்தால் அதற்குப் பெயர் வேறு என்ன என்பதை நாம் யோசிக்க வேண்டும்!

எழுதக் கூடியவர்களும் படிக்கக் கூடியவர்களும் தாங்கள் எழுதி – படிப்பவற்றை அறிவோடு உணரக் கூடியவர்களா என்பது முக்கியம். இதற்கெல்லாம் பிறகு வருவது ஞானம் என்கிற நிலை. அறிவும் ஞானமும் கூட ஒன்று கிடையாது.

ஆகவே, படித்தவர்கள் பலர் பாஸ்கர ராயரை வம்புக்கு இழுத்தார்கள். அவர்களுள் ஓரளவு பண்டிதரான ஒருவர், குங்குமானந்தர் சொல்வதில் ஏதோ உண்மை இருக்கிறது என்று உணர்ந்தார். 'நாம் என்ன கேள்வி கேட்டாலும் பதில் சொல்லும் பாஸ்கரராயர், இந்தக் குங்குமானந்த சுவாமி சொல்வதுபோல் பெரிய மகான்தான் போலும்' என்று எண்ணினார். 'நாம் இவரிடம் அனாவசிய மாக மோதிப் பார்க்கிறோமோ என்னவோ தெரியவில்லை. எதற்கும் உண்மையைத் தெரிந்துகொள்ளலாம்' என்ற ஆசையிலே,

"என்ன சொல்கிறீர்கள்...? கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்கள்" என்றார் குங்குமானந்தரிடம்.

குங்குமானந்த சுவாமி சொன்னார்:

"நீங்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பாஸ்கரராயர் ஏதோ சாமானியமாகப் பதில் சொல்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அவர் தோள்களில் சாக்ஷாத் அம்பிகையே அமர்ந்து கொண்டு பதில் சொல்லிக் கொண்டிருக்கிறாள் என்பது உங்களுக்குப் புரியவில்லை!"



இந்தப் பண்டிதருக்கு என்ன ஆசை வந்தது...?

"அம்பிகையே தோளில் அமர்ந்து பதில் சொல்கிறாள் என்றால், அந்த அம்பிகையை நானும் தரிசனம் பண்ண வேண்டுமே– என் கண்ணால்..."என்று கேட்கிறார்!

குங்குமானந்த சுவாமி பாஸ்கர ராயரிடம் வந்து சொன்னார்; "அவர் கேட்கிறார் அம்பிகையைத் தரிசனம் பண்ணவேண்டும் என்று. என்ன இருந்தாலும் – இவ்வளவு நேரம் வாக்குவாதம் செய்தவர் என்ற போதிலும் – இப்போது அம்பிகையைத் தரிசிக்க வேண்டும் என்று கேட்கிறார் அல்லவா...? தரிசிக்க வேண்டும் என்று யார் ஆசைப்படுகிறார்களோ, அவர்களுக்கு அம்பிகை பிரத்யக்ஷமாகக் காட்சி கொடுப்பாள் இல்லையா...?" என்று கேட்டவுடனே...

## பண்டிதர்கள் விடுத்த சவால்!

பாஸ்கரராயருடைய தோள்களில் அமர்ந்துகொண்டு அம்பிகை பதில் சொல்கிற காட்சி, அந்தப் பண்டிதருக்குக் கண்களின் முன் தெரிகிறது. பிரத்யக்ஷமாக அம்பிகை அமர்ந்திருப்பதைப் பார்த்த பண்டிதர், பிறரிடம் அதை விவரிக்கிறார். தாங்கள் ஆணவத்துடன் நடந்து கொண்டது தவறு என்பதை அவர்கள் புரிந்து கொள்கிறார்கள். இருந்தாலும்கூட, பாஸ்கரராயரின் பெருமை என்ன, எதற்காக அவர் தோளில் மட்டும் அம்பிகை வந்து அமர்ந்து கொள்கிறாள் என்பதை இன்னும் பரிபூரணமாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக, இன்னொன்றும் கேட்கிறார்கள் அவர்கள்!

"நாங்கள் இவ்வளவு நேரம் கேட்டதெல்லாம் எங்களுக்குத் தெரிந்தவை; எங்களுக்குத் தெரிந்ததாக நினைத்துக் கொண்டிருப்பதை நாங்கள் கேட்டோம். ஆனால், எங்களுக்குத் தெரியாத ஒன்றை இவர் விளக்கமாகச் சொல்லவேண்டும். அப்படிச் சொல்வாரேயானால், சாக்ஷாத் அம்பிகைதான் இதை இவருக்குத் தெரிவிக்கிறாள் என்பதை நாங்கள் புரிந்து கொள்வோம்" என்கிறார்கள்!

அங்கேதான் சிக்கல் வந்தது –

(தொடரும்)

# தராசு

நீங்கள் கேட்டவை

● கே.ரெங்கநாதன், திருவாரூர்

**? தீவிரவாதத்தை ஒழிக்க வழியே இல்லையா?**

! வழி கண்டாக வேண்டும் (சென்ற வார தலையங்கம் காண்க). நம் நாட்டில் குப்பை மேடு கூட தீவிரவாதத்தின் நிலைக்களன் ஆகிவருகிறது. பாட்னாவில் குப்பை மேட்டில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தை அங்கேயே நாட்டு வெடி குண்டுக்குப் பலி!

● ஆர். செல்லம்மாள், திருச்சி - 6

**? கீதை வாக்குபடி மகத நாட்டு மன்னன் சித்தார்த்தன், தமது கடமையான, குடும்பத்தைப் பராமரிப்பதையும் நாட்டு மக்களைக் காக்கின்ற செயலையும் துறந்துவிட்டு உபதேசம் செய்தது எவ்வாறு நியாயமாகும்?**

! அவருடைய உபதேசங்கள் உலக மக்கள் அனைவரின் உய்தலுக்கும் உதவின; இன்னும் உதவி வருகின்றன என்னும்போது அவரது அன்றைய ராஜ்யமும் குடும்பமும் அதனுள் அடக்கம்தானே. பெரிய நன்மைகளுக்காக, சிறிய சோதனைகளைச் சந்தித்துத்தான் ஆக வேண்டும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

**? "வீட்டுக்கு உலகைக் கொண்டு வந்தோம். வரலாற்றில் தமிழகத்தைக் கொண்டு செல்வோம்!" என இலவச டீ.வி. வழங்கிய நாளில் தமிழக செய்தி மக்கள் தொடர்புத் துறை விளம்பரம் செய்தது பற்றி...?**

! ஆட்சி, மக்களுக்கு வரி விதிக்கும் - அதைக் கட்சிப் பிரசாரத்துக்கும் பயன்படுத்தும் என்பது மக்கள் தொடர்புத் துறையின் பகிரங்க கொள்கையாகி விட்டது.

● பி.ராஜேஸ்வரி, மதுரை-16

**? பெண்களுக்கென தனிக்கட்சி வேண்டும் என்று கனிமொழி கூறியுள்ளாரே?**

! இது கனிந்த மொழியன்று; காய்மொழி. சமத்துவம் தேடுவதுதான் பெண்களின் நோக்கமாக இருக்க வேண்டுமே தவிர, தனித்துவம் அல்ல.


• தேவை மொழி


• ஏக்க மொழி


• ஆசைமொழி!

# பெண்களுக்குத்...

● முக.சுகாரா, தொண்டி

**? "ஜோதிகாவுக்குக் குடும்ப வாழ்க்கை முக்கியம் என்பதால் இனி சினிமாவில் அவர் நடிக்க மாட்டார்" என சூர்யா கூறியிருப்பது பற்றி...?**

! இருவரும் கலந்தாலோசித்தே அந்த முடிவை எடுத்திருப்பார்கள் என்று நம்புவோம். அவ்வாறு முடிவெடுக்கும் அவர்களின் உரிமையையும் எண்ணத்தையும் மதிப்போம்.

● க.குமரேசன், சென்னை - 49

**? "சும்மா இருக்கும் சுகம் தா" என்று தாயுமான சுவாமி இறைவனிடத்தில் வேண்டுகிறாரே... சும்மா இருப்பது என்பது முடியாத காரியமா?**

! சும்மா இருப்பது என்பது உடலால்

ஓய்வுகொள்வதைக் குறிப்பதல்ல. சித்தத்தை அடக்கி, புலன் இன்பங்களின் ஈர்ப்பிலிருந்து விடுபட்டு, பேரின்ப நெறியில் நின்று உயிர்களிடத்து பேரன்பு காட்டுவதே - இது சுலபமல்ல; இறையருள் இருந்தால்தான் இந்த நிலைக்கு உயர முடியும். அதனால்தான் அதை வேண்டுகிறார்.

● எம்.ஜோதிகுமார், சென்னை - 106

**? ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு தெருவுக்கு ராமன் பெயரைச் சூட்ட வேண்டும் என்கிறாரே அசோக் சிங்கல்?**

! இப்போதே அப்படித்தான் இருக்கு, சிங்கால் ஸார்! பிள்ளையார் கோயில் தெரு, ராமசாமி கோயில் தெரு, அம்மன் கோயில் தெரு என்று இல்லாத ஊர்களே கிடையாது. இப்ப நீங்க சொல்றது 'சும்மா கிடக்குற சங்கை ஊதிக் கெடுத்தானாம் ஆண்டி' என்ற கதையாகிவிடும்!

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

**? பின்லேடனைப் பிடிக்க அமெரிக்கா பட்ஜெட்டில் நூறு கோடி பணம் ஒதுக்கியுள்ளதே?**

! பணம் ஒதுக்குவதால் மட்டும் பின்லேடனைப் பிடித்துவிட முடியாது. அதைத் திறம்படப் பயன்படுத்தும் சாணக்கியம் மிக்க திட்டம் தேவை. இல்லையெனில் செலவழிக்கப்படும் பணத்தின் பெரும்பகுதி பின்லேடனைப் பலப்படுத்தவே உதவும்!

● ஜி.குப்புசாமி, சங்கராபுரம்

**? சிக்-குன்-குன்யா நோய்க்குக் கழுதைப் பால் சிறந்தது என்று மக்கள் நம்புகிறார்களே, இது குறித்து?**

! சிக்-குன்-குன்யா நோயைவிடக் கொடியது அது குறித்து பரவி வரும் பலவித மூடநம்பிக்கைகள், வதந்திகள். இவற்றுக்குத் 'தடுப்பு ஊசி' போடுவது ரொம்ப முக்கியம். ஆனால், பல கட்சித் தலைவர்களும் இந்த நோயையும் அரசியல் ஆதாயத்துக்குப் பயன்படுத்துகிறார்களேயொழிய, மக்களுக்கு உதவ முன்வரவில்லையே!

● ஜெ.மகேஸ்வரி, மதுரை - 4

**? நான்கு மாதங்களில் பல உறுதிமொழிகளை நிறைவேற்றிய தி.மு.க. அரசுக்கு, தமிழக மக்கள் என்ன கைமாறு செய்யப் போகிறார்கள் என்று தயாநிதி மாறன் கேட்டிருக்கிறாரே?**

! ஆசையைப் பார், ஆசையை! இப்



• கனிமொழி!

# ...தனிக்கட்சி வேண்டுமாமே!

போது நிறைவேற்றப்பட்டுள்ள உறுதி மொழிகள் சட்டமன்றத் தேர்தலில் கூட்டணி வெற்றிக்காக அறிவிக்கப்பட்டவை. உள்ளாட்சித் தேர்தலையொட்டி வேறு புதுப்புது இலவசங்களை யோசனை பண்ணி அறிவிக்க வேண்டியதுதான். இலவசங்களுக்கு மக்கள் பழகிப் போய் விட்டார்கள் தயாநிதி ஸார்!

● **எம்.சம்பத்,**
**வேலாயுதம்பாளையம்**

***? 'சசிகலா' ஜெயலலிதாவுக்காகச் செய்த தியாகங்களுக்கு, அவரை தமிழக முதல்வராகவே ஆக்க வேண்டும்' என்று எம்.நடராஜன் கூறுகிறாரே?***

! முதலமைச்சர் பொறுப்பு வகிப்பதற்கான தகுதி அ.தி.மு.க.வில் என்ன என்பதை இதன் மூலம் தெரிந்துகொள்ளுங்கள். கட்சித் தொண்டும் மக்கள் தொண்டும் அரசியல் ஞானமும் முக்கியமல்ல; ஜெ.வுக்குத் தொண்டு செய்திருந்தால் போதும்!



• சேவைமொழி!

● **கு.கணேசன், பனங்கோட்டூர்**

***? "கருணாநிதி ஆட்சியில் தமிழகம் தீவிரவாதிகளின் சரணாலயமாக மாறி விட்டது" என்று கூறப்படும் குற்றச் சாட்டு குறித்து?***

! அப்படி ஒரு குற்றச்சாட்டு எழுந்தது நல்லதுதான். கலெக்டர்கள் மாநாட்டில் தீவிரவாதிகளுக்கு எதிரான நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்துமாறு முதல்வர் அறிவுறுத்தியிருக்கிறார்.

❒ **ரூ.100/- பரிசு பெறுபவர்:**
ஆர்.லதா,
க/பெ. ராஜா,
தேவூர் அஞ்சல், சங்ககிரி தாலுகா,
சேலம் - 637 104

* **ரூ.50/- பரிசு பெறுபவர்:**
க.குமரேசன்,
33/14, மௌனசாமி மடத் தெரு,
வில்லிவாக்கம்,
சென்னை - 600 049

உளவு, முன்னெச்சரிக்கை, தயார் நிலை மூன்றையும் வலியுறுத்தியுள்ளார்.

● **க.நா.இராஜேஸ்வரன்,**
**மொரட்டுப்பாளையம்**

***? கலப்புத் திருமணங்களை ஊக்குவிக்கும் வகையில் ஊக்கப் பரிசு வழங்க மத்திய அரசு முடிவெடுத்துள்ளதை வரவேற்கலாமா?***

! ஊக்கத் தொகைக்காக நடக்கும் கலப்புத் திருமணம் உருப்படாது. மனமொன்றி கலப்புத் திருமணம் செய்துகொண்டு, வாழ்க்கை முறை வேற்றுமைகளையும் பிறரிடமிருந்து தோன்றக்கூடிய இடையூறுகளையும் வெற்றிகொள்ளத் தீர்மானித்த தம்பதிக்கு, ஊக்கத்தொகை பொருட்டே அல்ல.

● **ஆர்.தங்கராஜ், திருப்பூர்**

***? 'கிசுகிசு வராதா என ஏங்கித் தவிக்கிறேன்' என நடிகை நயன்தாரா பேட்டியளித்துள்ளாரே?***

! பிரபலமடைய இதுவோர் உத்தி என்பதை நயன்தாரா புரிந்துகொண்டு விட்டார். இனி சிம்புவின் மீது அவருக்குக் காதல் வந்தாலும் வராவிட்டாலும் நோ பிரச்னை!

● **ஆர்.லதா, தேவூர்**

***? ஏழைகளுக்கு முப்பது சென்ட் நிலம் கொடுத்தால் போதும். வீடு கட்டிக் கொள்ள இரண்டு ஏக்கரில் பங்களாவா கட்டப் போகின்றனர் என இந்திய கம்யூனிஸ்ட் கட்சி கூறியுள்ளது பற்றித் தங்கள் கருத்து என்ன...?***

! 1. வீட்டு மனை அல்ல; விவசாயத்துக்கு ஏற்ப தரிசு நிலமானால்கூட பண்படுத்தித் தருவதாகச் சொல்கிறது தமிழக அரசு. எத்தகைய நிலமானாலும் அரசு நிலம் என்பது மக்களுக்குச் சொந்தமான நிலமே. அதை மக்களில் சிலருக்கே பட்டா வழங்கும்போது கருணாநிதி ஏதோ தமது அன்பளிப்பு போல பட்டாவிலேயே தமது படத்தை அச்சடிப்பது அதிகார துஷ்பிரயோகமாகும். 2. நிலத்தை விற்கவோ, அடகு வைக்கவோ, பங்கு பிரிக்கவோ, ஒரு நேரடி வாரிசு தவிர, வேறு யாருக்கும் பரிசளிக்கவோ முடியாது என நிபந்தனை விதித்திருக்க வேண்டும்.

**தா**மிரபரணி நதிக்கரையில் வயல்கள் நிறைந்த எழில்மிகு கிராமம்தான் மேலச்செவல். திருவெல்வேலியிலிருந்து அம்பாசமுத்திரம் செல்லும் வழியில் 16 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. வேணுகோபாலன், நவநீத கிருஷ்ணன் மற்றும் மகாலிங்கேஸ்வர் மூவருக்கும் தனிக் கோயில்கள் உள்ள கிராமம். இவற்றில் நவநீதகிருஷ்ணன் கோயில் மிகவும் பழைமையானது. இரண்டு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்த இக்கோயிலில் கர்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், மணி மண்டபம் மற்றும் உட்பிரகாரம் போன்றவற்றுடன் இராமாயண, மகாபாரத கதாபாத்திரங்களை விளக்கும் மிக அற்புதமான சிற்பங்கள் மேற்கூரையில் இருக்கின்றன.

வயிறு முட்ட வெண்ணெயை உண்டுவிட்டு, இரு கைகளில் நிரம்ப எடுத்துக்கொண்டு, யசோதை பார்த்துவிட்டால் ஓடுவதற்குத் தயாராக ஒரு காலை முன்னே வைத்து நின்ற கோலத்தில் நவநீதகிருஷ்ணன் காட்சியளிக்கின்றார். சாளக்கிராம கல்லினால் செதுக்கப்பட்ட அற்புதமான மூலவர். பஞ்சலோகத்தில் செய்த உற்சவர். குழந்தைபேறு மற்றும் தடைபெற்ற திருமணம் இரண்டுக்கும் பரிகார ஸ்தலம்.

வில்லிபுத்தூர் ஆழ்வார், பாரதத்தை தமிழில் இயற்றும்போது, சதுர்வேதி கிராமமான மேலச்செவலில் இருக்கும் வேத விற்பன்னர்களின் ஆலோசனைகளை பெற்றுக்கொண்டார். படிப்பில் நாட்டமில்லாத வெள்ளி மலை கவிராயர், திருச்செந்தூர் முருகன் அருள்பெற்று, மேலச்செவலில் வாழ்ந்துகொண்டிருந்த கிருஷ்ண சாஸ்திரியிடம் இருந்த, வடமொழியில் எழுதப்பட்டிருந்த திருச்செந்தூர் புராணத்தை 900 செய்யுளாக தமிழில் அமைத்தார். மேலச்செவலில் குடியிருந்த பல குடும்பங்கள், மிக வருடங்களுக்கு முன்னதாகவே தொழில் மற்றும் வேலை நிமித்தமாக இக்கிராமத்தைத் துறந்து திருவனந்தபுரம் மற்றும் பல ஊர்களுக்கு குடி பெயர்ந்தார்கள். அவர்கள் சந்ததியினருக்கு திரு நவவீதகிருஷ்ணர் கோயில் சிறப்பு தெரியாமல் இருக்கலாம். குலதெய்வக்காரர்கள் ஒன்று சேர்ந்து கடந்த 2000 வருடம் தை மாதம், பூச நட்சத்திரத்தில் விமரிசையாக கும்பாபிஷேகம் செய்து, தற்பொழுது தினமும் பூஜைகள் நடைபெறு கின்றன. பிரதி வருடமும் தை பூசத்தன்று கலாபிஷேகம், ஹோமம், யாகங்கள் நடைபெறுகின்றன.

இதை படிக்கும் குலதெய்வக்காரர்கள் மேலச்செவல் வந்து நவநீதகிருஷ்ணனை தரிசித்துக்கொண்டு போகவும். திருநெல்வேலி ஜங்ஷனிலிருந்து மேலச்செவல் கிராமத்துக்கு காலை 6 மணி முதல் 90 நிமிடத்துக்கு ஒருமுறை பஸ் வசதி இருக்கிறது. மற்ற விவரங்கள் அறிய தொடர்புகொள்ளவும்.

**சென்னை எஸ்.வி.கிருஷ்ணன் : 044 - 24928560**
**திருநெல்வேலி நாராயணய்யர் : 0462 - 2533363**
**மேலச்செவல் பாஸ்கர முதலியார் : 04634 - 279200**

# கொவ்வை படர்ந்த வேலி

**தூரன் குணா** 

கொழுக்கட்டான் புற்கள் நன்றாக வளர்ந்திருந்தன. தொடர் மழையால் கொரங்காடுகள் அடர்ந்தும் இந்த வருஷம் குளுமையுற்றிருந்தது. கொரங்காட்டுக்குள் அடிக்கடி முயல்கள் ஓடுகின்றன. வேலியெங்கும் அணில்கள், கிளிகள் கொத்திய கோவைப்பழச்சாறு சிந்தி வேலியடிகள் சிவந்திருக்கின்றன. ஊஞ்சல் மரத்தடியில் அமர்ந்திருந்தவனிடம் 'செம்மி' வெள்ளாடு வந்து நின்றது. தலை தடவி விட்டவுடன் இவன் முதுகில் வந்து உரசியது. வெள்ளாடுகள் செம்மறிபோல் மிரளவில்லை.

எழுந்தவன் ஒருமுறை ஆடுகளை எண்ணிப் பார்த்துக்கொண்டான். ஆடு மேய்ப்பதில் என்றுமே இவனுக்கு தனி பிரியந்தான். செமஸ்டர் லீவுக்கு வரும்போதே தீர்மானித்துக் கொண்டு தான் வந்தான். படிக்கிறவனுக்கு இந்த வேலை எதற்கென்று அண்ணன்கூட தடுத்தான்.

பாப்பா இன்னும் ஆடோட்டிக் கொண்டு வரவில்லை. முன்பு அவர்கள் பண்ணையத்தில் பண்டக்காரன் இருந்தான். இப்போது ஆளில்லை போல. இவன் ஆடோட்டிக் கொண்டு வரும் இந்த மூன்று நாட்களாக பாப்பாதான் வருகிறாள். ஸ்கூல் லீவாகயிருக்கக்கூடும்.

இவன் நேற்றுதான் முதன்முதலாக பாப்பாவோடு பேசினான். அப்பாவின் மீதும் சித்தப்பாவின் மீதும் கோபம் வந்தது. தலைமுறைப் பகை, யுகம் யுகமாய் உள்ளோடிக் கொண்டிருந்தாலும், பிரியத்தின் சுனை கண் திறப்பதற்கு ஒரு நொடிதான்.

நேற்று இந்த நேரமிருக்கும். மேவரம் சித்தப்பனின் கொரங்காட்டில் ஆடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. பாப்பா கிழக்கு வேலிப்பக்கம் ஆடுகளை விடுவதேயில்லை. கூச்சப்பட்டிருப்பாளென்று நினைத்துக்கொண்டு மரத்தடியி படுத்திருந்தான்.

மேவரம் பாப்பாவின் கூச்சல் கேட்டவுடன் வேகமாக எழுந்து பார்த்தான். கிடாய் கிழக்கே வேகமாக ஓடிவந்து கொண்டிருந்தது. அவள் பின்னால் துரத்திக்கொண்டு வந்தாள். இவன் பார்க்க பார்க்க, கிடாய் வேலியின் மேலேறிக் குதித்து இந்தப் பக்கம் வந்துவிட்டது. ஆடுகள் மேய்வதை நிறுத்திவிட்டு தலையுயர்த்தி மிரண்டன.

இவனும் சத்தம் போட்டுக் கொண்டே ஓடினான். அதற்குள் இவன் பட்டிக் கிடாய்க்கும் அதற்கும் யுத்தம் ஆரம்பமாகிவிட்டது. மோதிக் கொள்கையில் கிடாய்களுக்கு மனிதனுக்குக் குறையாத வன்மமிருக்கும். கிடாய்கள் அந்நியரை அனுமதிப்பதில்லை.

இரண்டும் பத்தடி பின்னகர்ந்து ஓடிவந்து முட்டிக் கொண்டிருந்தன. இவனுடையது கொம்புக் கிடாய். அது மொட்டை. சீக்கிரம் தடுக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டே கல்லெடுக்க குனிகையில் தான் கவனித்தான் - பின்னால் பாப்பா நிற்பதை.

"நீ தள்ளிக்க பாப்பா... நா பாத்துக்கறேன்."

பாப்பா பின்னால் போய்விட்டாள்.

கிடாய்கள் இப்பொழுது இன்னும் வேகமாக மோதிக்கொண்டிருந்தன. இவன் தன் பட்டிக்கிடாயை ஓங்கிக் கல்லால் அடிக்க, அது லேசாக மிரண்டது. மொட்டைக்கிடாய் இவனையும் கொம்புக் கிடாயையும் மாறி மாறி முறைத்தது. இன்னும் வேகமாக கொம்புக் கிடாயை அடிக்க, அது திரும்பி ஆடுகளோடு சேர்ந்துகொள்ள ஓடியது. இவன் இன்னொரு கல்லெடுக்க அது திரும்பியோடி வேலியைத் தாண்டிக் குதித்து அந்தப் பக்கம் நின்றவாறே முறைத்தது.

பாப்பா பின்னாலேயே வேலிவரை போய்விட்டாள். இவன்தான் கூப்பிட்டான்.

"ஏம் பாப்பா போறே? அண்ணனைப் பாத்தா பயமாயிடுக்குதா? இங்க வா..."

பாப்பா திரும்பி மெதுவாகப் புன்னகைத்தாள்.

"ஸ்கூல் லீவா பாப்பா?"

"ஆமாங்கண்ணா."

"இந்த வருஷம் எத்தனாவது?"

"எட்டாவதுங்கண்ணா."

"அப்பா, அம்மாவெல்லாம் நல்லாருக்கறாங்களா?"

தலையசைத்தாள். மேலே என்ன பேசுவதென்று புரியாமல் யோசித்த போது கேட்டாள்.

"என்னுங்கண்ணா, காட்டுக்கு வரையில்கூட வாட்ச் கட்டிட்டு வறீங்க?"

"டைம் பாக்கறதுக்குத்தான்."

"நா வாட்ச் பாக்காமேயே டைம் சொல்வனே..."

"அப்டியா?"

"இப்பப் பாருங்க. சொல்லிவிட்டு வெயிலுக்குப் போய் சூரியனைப் பார்த்தவாறே கிழக்கு பார்த்து நின்றவள், ஓரக் கண்ணில் தன் நிழலைப் பார்த்து விட்டு சொன்னாள்.

"இப்ப மணி பன்னண்டு இருக்குமுங்கண்ணா."

"ஹை... கரெக்ட்"

வாட்ச்சைப் பார்த்துவிட்டுச் சொன்னான். இவனுக்கும் இப்படி மணி பார்க்கலாமென்று தெரியும். ஆனால் இதுவரை சரியாய்த்தான் கணிக்க முடிந்ததில்லை....

"அண்ணா... நா போற

**போட்டிக் கதை**

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்**

**பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

னுங்க... இல்லீனா ஆடுக தெக்க முட்டிடும்."

இவன் தலையசைத்துவிட்டுக் கேட்டான். "நாளைக்கி ஆடோட்டிக்கிட்டு வருவியா?"

"வருவனுங்கண்ணா" சொல்லிக் கொண்டே வேலியைத் தாண்டிக் குதித்தான் பாப்பா. இவ்வளவு வெளிச்சமாய் பாப்பாவை எதிர்கொள்வதற்கு சந்தோஷமாகவிருந்தது.

**பா**ப்பா வந்துவிட்டாள். இவன் மரத்தடியில் அமர அவளும் பக்கத்தில் அமர்ந்தாள். தன் தோழிகளைப் பற்றி, சித்தப்பன் சித்தியைப் பற்றி பாப்பா பேசிக் கொண்டிருந்தாள். எவ்வளவு எளிமையாய் தன்னிடம் இவள் பூத்துவிட்டாளென்பதை நினைக்கையில் தொண்டையில் ஏதோ அடைத்தது.

பக்கத்தில் விர்ரென்ற சப்தத்துடன் செம்பொன் வண்டொன்று பறந்து போனது.

"ஐ... பொன்னாம்பூச்சி" பார்த்த பாப்பா குதூகலித்துச் சொன்னாள்"

"உனக்குப் பொன்னாம்பூச்சி வேணுமா பாப்பா?" இவன் கேட்டுக் கொண்டே எழ, பாப்பா இவனை முந்திக்கொண்டோடினாள். செம்பொன் வண்டு கிளுவைக் கிளையில் அமர்ந்தது.

இமையசையாமல் அதையே பார்த்துக்கொண்டு ஒவ்வோர் எட்டாய் வைத்தான். ஒருகாலை எம்பி பொன்வண்டைப் பிடித்துவிட்டவன் வேகமாகக் காலை ஊன்றினான்.

"ஆ..." வலி தாங்காமல் குதித்தான்.

"ஐய்யோ.. முள்ளு குத்திருச்சுங்களா?" பதற்றமாகக் கேட்டவளிடம் பொன்வண்டை நீட்டினான். வாங்கிய பாப்பா அதை வீசியெறிய, அது ஆகாயத்தில் எம்பிப் பறந்தது.

**நிலா நிலா ஓடிவா!**



"**த**மிழ்ப் படத்து பக்கமே வரமாட்டேன்னு சொல்லிட்டுப் போன நிலா இப்போ அரை டஜன் தமிழ்ப்படம் கையிலே இருக்குன்னு அவங்களே தம்பட்டம் அடிச்சிக் கிறாங்க.

"குடுங்க... நா எடுத்துவிடறேன்."

"இல்ல வுடு... நானே எடுக்கறேன்."

இவள் காலை இழுத்து மடியில் வைத்து குதிகாலில் எச்சிலைத் தடவினாள்.

முள் ஆழம் போயிருந்தது. இவனுக்கு வலி பொறுக்காமல் கண்களில் தண்ணீர் வருவதைப் பரிதாபமாகப் பார்த்தாள். எடுப்பதற்கு நேரமாகிவிட்டது. இரத்தம் கொட்டி பாப்பாவின் பாவாடையில் ஓரிரு சொட்டு விழுந்தது.

"ரொம்ப வலிக்குதுங்களா?"

"அட ஒண்ணுமில்ல பாப்பா... இது என்ன பண்ணிடப் போகுது?"

"இப்படித்தானுங்க, ரெண்டு வருசத்துக்கு முன்னால அப்பாவுக்கு வேலி அடக்கையில பெரிய முள்ளு அடிச்சு உள்ளங்காலுல இருந்து மேல பொத்துட்டு வந்துருச்சு. அப்புறம் செட்டிபாளையப் பண்டுக்கார ஆத்தாகிட்டப் போயி முள்ளு எடுத்துச்சு."

இவனும் அதைக் கேள்விப்பட்டிருந்தான்.

"அண்ணா... ஆடுக முட்டுது. நா போயி திரும்பி விட்டுட்டு வந்து தர்றேன்" சொல்லிக் கொண்டே எழுந்தவள் அலறிக் கொண்டே வயிற்றை இறுகப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

"அய்யய்யோ... என்னாச்சு பாப்பா?" பதறியெழுந்தான்.

"வயித்த வலிக்குதுங்க" சொல்லியவாறே அழுதவளைப் பார்த்தவன் அதிர்ந்தான். நீலப்பூக்கள் போட்ட வெள்ளைப் பாவாடையில் இரத்தம். இவனுக்குப் புரிந்தும் புரியாதது போலிருந்தது. கண்கள் அனிச்சையாகக் கடிகாரத்தைப் பார்த்தன.

அவள் கேவியழுவதைப் பார்க்கையில் பதற்றமாகவிருந்தது. ஓடிப்போய் மஞ்சள் பையிலிருந்த தண்ணீர் பாட்

டிலை எடுத்துக் கொடுத்தான்.

"ஒண்ணுமில்ல பாப்பா... பயப் படாதே... இந்தா தண்ணீயக் குடி" ஒரு மிடறு குடித்தவள் வைத்துவிட்டாள்.

"ரொம்ப வலிக்குதுங்கண்ணா..."

"இது... இது ஒண்ணுமில்ல பாப்பா.. இத இங்கியே நெழல உக்காந்துரு. நான் போயி அஞ்சே நிமிசத்துல அம்மாவ கூட்டியாந்துர்றேன்."

"பயமாயிருக்குது."

"பயப்படாத. இத அண்ண வந் துர்றன்" சொன்னவன் ஓட்டமும் நடை யுமாய் கொரங்காடுகளைத் தாண்ட ஆரம்பித்தான். முள் ஏறிய கால் வேறு கடுத்தது. சித்தப்பனுடையது ஊரடித் தோட்டம். பத்து நிமிசத்தில் வந்து விட்டான். வேர்க்க வேர்க்க விறுவிறுக்க தொப்புலாய் வந்தவனைச் சித்தி ஆச்சரியமாகப் பார்த்தாள்.

"சித்தீ..."

"என்றா ராசு... ஏன் இப்டி ஓடி யாறே?"

"சித்தி கொஞ்ச எங்கூடவ பெரு மாங்காட்டுக்கு வாங்களேன்."

"அட... ஏன்... என்னாச்சு?"

"பாப்பா..பாப்பா..."

"அட... அவ அங்கதா ஆடோட் டிட்டு வந்தாளா?"

"வயித்து வலிக்குதுங்களாமா" என்றவன் தரையைப் பார்த்துக் கொண்டே சொன்னான். "வயசுக்கு வந்துட்டாளாட்ட இருக்குதுங்க சித்தீ..."

சித்தி இவனுக்கு முன்னால் வெக் வெக்கென்று நடந்து போனாள்.

இவன் பெருமாங்காட்டுக்கு வருகை யில், பாப்பாவைக் கைத்தாங்கலாய கூட்டிக்கொண்டு சித்தி எதிர்ப்பட்டாள். பாப்பாவின் முகம் வீங்கியிருந்தது.

"கொஞ்ச நேர ஆட்ட பாத்துக்க ராசு" சொல்லிவிட்டு கடந்த சித்தியின் முதுகைப் பார்த்து இவன் தலையசைத் தான்.

**சா**யந்திரம் ஏழு மணியிருக்கும். இவன் வாசலில் நடந்துகொண் டிருந்தான். அண்ணன் சந்தைக்கு மிளகாய் மூட்டைகளைத் தைத்துக் கொண்டிருந்தான். அப்பா வாசலில் கயிற்றுக்கட்டிலில் உட்கார்ந்திருக்க,

## டியர் வாசகாஸ்...

> **உங்க ஆரோக்ய, அரசியல், ஆன்மிக அனுபவங்களை சுவை குன்றாம எங்களுக்கு எழுதி அனுப்புங்க. சிறந்தவை அச்சேறி சன்மானம் பெறும். அஞ்சலட்டையில் அனுப்பினாலே போதும். உடனே... உடனே... தட்டிவிடுங்க!**

அம்மா அடுப்படியில் காபி வைத்துக் கொண்டிருந்தாள்.

"ஏதோ டி.வி.எஸ்.ஸாட்ட வருது" சொல்லிக்கொண்டு அம்மா வெளியே வந்தாள். சித்தப்பனும் சித்தியும். எல் லோரும் அப்பாவைப் பார்த்தோம். அம்மா முந்திக்கொண்டாள்.

"வாங்க...வா சாமாத்தா" இருவரும் தயக்கமாய் அப்பாவைப் பார்க்க, அப்பா என்னிடம் சொன்னார்:

"சேர எடுத்தாந்து சித்தப்பனுக்குப் போடு."

அப்பாவும் சித்தப்பனும் பட்டுப் படாமல் பண்ணைய விவரங்களைப் பேசுவதைக் கேட்க சிரிப்பாகவிருந்தது. அம்மா இவனை அடுப்படிக்குக் கூப் பிட்டாள்.

"மணி அப்ப பதினொன்றரை."

இருவரும் சாப்பிட்டுவிட்டுத்தான் போனார்கள். திங்கட்கிழமை தெரட்டி யென்றும் ஞாயிற்றுக்கிழமையே வந்து விடவேண்டுமென்றும் சொல்லிப் போயிருந்தார்கள். அதற்குப் பின்வந்த நாட்களில் இரு குடும்பங்களுக்குள்ளும் புதுவெள்ளம் பாய்ந்தது போலிருந்தது.

என்ன, பாப்பாதான் இவனோடு பேசுவதை நிறுத்திக்கொண்டாள். ○



எத்தனை காலணிகளைப்
பளபளப்பாக்கினாலும்
எங்கள் வாழ்க்கை
மட்டும் இன்னும்
அழுக்காகவே...

படம் : எச்.எஸ். முகம்மது ரஃபி

